4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண்: எம். 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 12) மதுரை 20-9-73 வியாழன் (மலர் 220

## வங்காளிகள் பாகிஸ்தானியர்கள் பரிவர்த்தனை துவக்கம்

புதுடெல்லி, செப் 19—

பங்களா தேசத்தில் உள்ள பாகிஸ்தான் மக்களையும், பாகிஸ்தானிலுள்ள பங்களா தேஷ மக்களையும் விமானத்தின் மூலம் பரிவர்த்தனை செய்யும் துவக்க நடவடிக்கை இன்று ஆரம்பமாகிறது. இது சமீபத்தில் பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்குமிடையே ஏற்பட்டுள்ள டெல்லி ஒப்பந்தத்தை அமுல் படுத்துவதின் ஆரம்ப கட்டமாகும்.

இந்நடவடிக்கையின்படி பங்களா தேஷத்தில் உள்ள 2000 பாகிஸ்தானியரையும், பாகிஸ்தானில் உள்ள 2600 பங்களாதேஷ் மக்களையும் பரிவர்த்தனை செய்து கொள்வர்.

## போலீஸ் துப்பாக்கிச் சூடு ஒருவர் சாவு

பெங்களூர், செப் 19—

நேற்று மைசூர் மாநிலத்தில், ராணிபென்னூர் என்ற இடத்தில் உணவுக் கிளர்ச்சி செய்த பொது மக்கள் மீது போலீஸ் துப்பாக்கிச் சூடு நடத்தியது. ஒருவர் இறந்தார்; பலர் படுகாயம் அடைந்தனர்.

ரயில் மூலம் தானியம் கடத்தப்படுவதைக் கண்ட மக்கள், ரயில் பெட்டியில் இருந்த தானியத்தை எடுத்து விநியோகம் செய்ய முயற்சித்த போதே, போலீஸ் இந்த நீசத்தனமான துப்பாக்கிச் சூடு நடத்தியது.

மைசூர்

## உணவுப் போராட்டத்தை அடக்க கேரள போலீசா?

### தோழர் இ. கே. நாயனர் கண்டனம்

ஆழப்புழை, செப். 16—

பட்டினிக்கெதிராக உணவு கேட்டு போராடும் மைசூர் மக்களையும், மாணவர்களையும் அடக்குவதற்கு கேரளத்திலிருந்து ஆயுதப் போலீசை அனுப்பக் கூடாது என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கேரள மாநிலச் செயலாளர் தோழர் இ. கே. நாயனர் எதிர்ப்பு தெரிவித்தார்.

நேற்று அவர்விடுத்துள்ள ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:—

கடுமையான உணவுத் தட்டுப்பாட்டினால் திண்டாடும் மைசூர் மாநில மக்கள் நிலப்பிரபுக்களும், வியாபாரிகளும் பதுக்கி வைத்திருந்த உணவு தானியங்களை கைப்பற்றி விநியோகத்தை மைசூர் அரசும், சில பிற்போக்கு பத்திரிகைகளும் 'கொள்ளை' நிகழ்ச்சிகளாகச் சித்தரிக்கின்றன பங்களூர், கோலார், சித்திரதுர்கா, மாண்டியா போன்ற பிரதேசங்களில வாட்டி வதைக்கும் பட்டினியை தாங்கமுடியாது பொது மக்களும மாணவர்களும உணவு கேட்டு நடத்தும் கிளர்ச்சியை துப்பாக்கியும், லத்தியும், கண்ணீர் புகையும் கொண்டு சந்திக்கிறது மைசூர் அரசு.



#### அண்டை மாநில போலீசா?

மைசூரில் பட்டினி கிடக்கும் மக்களுக்கு நியாய விலையில் உணவுப் பொருள் விநியோகிப்பதற்கு பதில் அவர்களது உணவுப் போராட்டத்தை அடக்கி ஒடுக்க அண்டை மாநிலங்களிலிருந்து போலீசையும், ராணுவத்தையும் வரவழைக்க மைசூர் அரசு அதிகாரபூர்வமாக முடிவெடுத்துள்ளதாகவும் கேரளத்திலிருந்தும் ராணுவத்தையும் போலீசையும் அனுப்பி வைக்க மைசூர் அரசு கேட்டுக்கொண்டுள்ளதாகவும் தெரிகிறது.

மைசூரில் உணவுக் கிளர்ச்சி நட்த்துவதில் வலது கம்யூனிஸ்டுகளும் முழு மூச்சுடன் செயல்படுகின்றனர். இவர்களையும சேர்த்து அடக்கி ஒடுக்குவதற்கு வலது கம்யூனிஸ்டான அச்சுதமேனன் போலீசை அனுப்பப் போகிறாரா?

#### அச்சுதரே பதில் சொல்லுக

உணவுக்காகப் போராடும் ஏழை மக்களின் எழுச்சியை உடைக்க ஒரு போதும் கேரள போலீசை அனுப்பி வைக்கக்கூடாது. மக்களுக்குத் தேவை போலீசும் ராணுவமுமல்ல. உணவு தான் இது குறித்து அச்சுதமேனன தெளிவான முடிவை அறிவிக்க வேண்டும். இவ்வாறு தோழர் இ.கே நாயனார் தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

மைசூரில்

## விலைவாசி உயர்வை எதிர்த்து மாணவர்கள் ஆர்ப்பாட்டம் போலீஸ்அடக்குமுறை

பெங்களூர், செப். 18—

மைசூர் மாநிலத்தில் கோலார் மாவட்ட சிந்தாமணியில பல நூற்று சணக்கான மாணவர்கள் உணவுப் பிரச்னையைத் தீர்க்கக்கோரியும் விலைவாசி உயர்வைக் குறைக்கக கோரியும் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

உணவு தானியக் கிடங்கிலிருந்து உணவுப் பொருட்களைக் கைப்பற்றி மக்களுக்கு விநியோகம செய்ய முயன்றனர் மாணவர்கள். அப்போது அவர்கள் மீது போலீஸ் மிருகத்தனமாக தடியடி நடத்தியது. கண்ணீர்ப்புகை குண்டு வீசியது.

மைசூர் மாநிலத்தில் பல் வேறு இடங்களில் உணவுப் பிரச்னைக்காக மாணவர்கள் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர்.

தார்வார் என்ற இடத்தில் பல கல்விக் கூடங்கள் மூடப்பட்டன.

## அலெண்டே அரசை கவிழ்ப்பதில் அமெரிக்க தூதரின் குழிபறிப்பு வேலை

### டைம்ஸ்ஆப் இந்தியா நிருபர் கூறுகிறார்

சாண்டியாகோ, செப் 19—

**நாடாளுமன்றத் தேர்தல் மூலம் மட்டுமே சோஷலிச சமுதாயத்தை அமைத்து விடலாமென்றும்—மக்களின் போராட்டம், புரட்சி எதுவும் தேவையில்லையென்றும் பல்லவி பாடி வருகிறவர்கள், லத்தீன் அமெரிக்க நாடான சிலியில் நடக்கும் கொலைத் தாண்டவத்தை அறிந்த பின்னரும் என்ன சொல்வார்கள் என்று தெரியவில்லை.**

சிலி நாட்டில் மார்க்சீயக் கொள்கையுடைய டாக்டர் அலெண்டே அவர்களின் பொதுஜன ஐக்கியக் கட்சியை நாடாளுமன்றத் தேர்தலில் மக்கள் தேர்ந்தெடுத்து இதுவரை இருந்த சர்வாதிகார ஆட்சிக்கு முடிவு கட்டினார்கள்.

சிலியின் அதிபராக அலெண்டே சால்வடார் பொறுப்பேற்ற பிறகு, நாட்டின் முன்னேற்றத்திற்காக அலெண்டே சர்க்கார் பல நடவடிக்கைகளையும், மேற்கொண்டது.

தோட்டங்களையும்சுரங்கங்களையும் அன்னியக் கம்பெனிகளையும் தேசவுடமை ஆக்கியது. தேச வருமானத்துக்கு வழி செய்து பல சீர்திருத்த நடவடிக்கைகளை எடுத்தது.

மக்கள் மீது வரிச்சுமையை ஏற்ற வில்லை,

#### அமெரிக்க சதி

இந்த தேசவுடைமை நடவடிக்கையால் பாதிக்கப்பட்ட அமெரிக்கப் பெரு முதலாளிகள், குறிப்பாக சர்வதேச டெலிபோன டெலிகிராப் கம்பெனியின் முதலாளிகளும், அமெரிக்க உளவு ஸ்தாபனமான சி ஐ ஏ யும், அமெரிக்க தூதரகமும் அலெண்டே அரசை கவிழ்ப்பதற்கு தீவிரமுயற்சிகளில இறங்கினர்.

கியூபாவுக்கு அடுத்தபடியாக, லத்தீன் அமெரிக்காவில் சிலிதேசம் சோசலிசப் பாதையில் துரிதநடை போடத் தொடங்குவதைக் கண்டு, அமெரிக்க ஏகாதிபத்யவாதிகள் ஆத்திரத்தால் துடித்தனர்.

ஊழல் பேர்வழிகளையும், சுயநலமிகளையும், பிற்போக்காளர்களையும் திரட்டி வெறியூட்டி கலகத்துக்கு ஏற்பாடு செய்தார்கள்.

இராணுவத தலைவர்களையும கைக்குள் போட்டுக் கொண்டு அலெண்டே சர்க்காரை கவிழ்க்கத் திட்டமிட்டார்கள்.

#### கொலைத் தாண்டவம்

அல்ஜியர்ஸில் நடந்த கூட்டுச் சேரா நாடுகளின் மாநாட்டில் கலந்து கொள்ள விருக்கும் சமயத்தில், எதிர்ப்புரட்சியை ஆரமபித்து ராணுவத் தாக்குதல் நடத்தி, அலெண்டே சர்க்காரைக் கவிழ்த்தார்கள். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பார்லிமெண்டைக் கலைத்தார்கள்.

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனதிபதி அலெண்டேயையும், மந்திரிகளையும் படுகொலை செய்தார்கள், தொழிலாளர்களையும் இடதுசாரிக கருத்துள்ளவர்களையும் மாணவர்களையும் கூட்டம் கூட்டமாகச் சுட்டுக் சொல்லுகிறார்கள்.

பத்திரிகை ஆசிரியர்களும் கொல்லப்பட்டார்கள். இந்தோனேஷியாவில் சுகார்சோ கூட்டம் ஆடிய கொலைவெறி ஆட்டமே, இன்று சிலி நாட்டில் நடக்கிறது.

#### கலகம் நடக்கிறது

இராணுவத்தின் பாசிஸ்ட் கொடூரத்தின் முன்னால் சிலி மக்கள் பணிந்து போகவில்லை. தொழிலாளர்களும் அலெண்டே ஆதரவு இராணுவத்தினரும ஆயுதமேந்திப போராடுகிறார்கள்.

அலெண்டேயை நீக்கி—சாகடிககப்பட்ட பிறகு—மீண்டும் பழைய சர்வாதிகார மிச்சசொச்சங்களை ஆட்சியில் அமர்த்த இராணுவ வெறியர்கள் முயற்சிககிறார்கள்.

ஆனால் மக்களின் கொந்தளிப்பு அடங்காத நிலையில், மாற்று ஆட்சியை அமைக்க முடியாமல, படு கொலைத் தாண்டவத்திலேயே இராணுவம் ஈடுபட்டிருக்கிறது.

வாசிங்டன் நகரிலுள்ள, 'டைம்ஸ் ஆப இந்தியா'' பத்திரிகை நிருபர் எம் வி காமத, சிலி நாட்டில், அலெண்டே சர்க்காரைக கவிழ்க்கும் முயற்சியில் அமெரிக்க அரசின் பங்கு என்ன?''—என்பதைப்பற்றி தகவல் அனுப்பியுள்ளார், அதில் சிலி நாட்டில் அமெரிக்க தூதுவராக உள்ள நத்தானியல் டேவிஸ் என்பவர், ஜனதிபதி அலெண்டேயின் மாளிகையை இராணுவப் படைகள் தாக்குவதறகு முன்னால்—அதாவது 7-9-73 வெள்ளிக்கிழமையன்று—சிலி தலைநகரான சாண்டியாகோவிலிருந்து திடீரென்று வாஷிங்டனுக்கு வந்துவிட்டு, அன்றே சாண்டியாகோவுக்கு திரும்பி விட்டார்.

அலெண்டே சர்க்காரைக் கவிழ்த்த இராணுவத் தாக்குதலுக்கும், நத்தானியல் டேவி

(4-ம் பக்கம் பார்க்க)

## சீனா-பிரான்சு கூட்டறிக்கை

ஷாங்காய், செப் 18—

சர்வதேச நிலைமையை சீராக்கும் பொருட்டு, சீனாவும், பிரான்சும் ஆதிபத்திய கொள்கைகளை எதிர்க்கின்றன என அவ்விரு நாடுகளும் ஒரு கூட்டறிக்கை வெளியிட்டுள்ளன.

சமீபத்தில் பிரெஞ்சு அதிபர் பாம்பீடு சீனாவுக்கு ஒரு வாரகால சுற்றுப்பிரயாணத்திற்கு சென்று அந்நாட்டு தலைவர்களோடு பேச்சு வார்த்தை நடத்தினாரல்லவா? அதன் முடிவாக அவ்விரு நாடுகளின் சார்பில் கூட்டறிக்கை விடப்பட்டுள்ளது.

#### வேறுபாடு

கம்போடியாயுத்தம் கிழக்கு மேற்கு ஐரோப்பா நாடுகளுடையே உள்ள அரசியல் விவகாரங்களில் சீனத்துக்கும், பிரான்சுக்கும் வேறுபாடு இருப்பதாகவும் அவ்வறிக்கை கூறுகிறது.

மேலும் பிரெஞ்சு அதிபர் பாம்பீடுசீனத்துக்குவருகை தந்தது அவ்விரு நாடுகளுக்கிடையே உள்ள உறவில் ஒரு புதிய கட்டம் என்று அவ்வறிக்கை கூறுகிறது.

#### உடன்பாடுகள்

அவ்விரு நாடுகளும் தங்களது ராஜ்ய உறவுகளை ஏற்படுத்தி 9 ஆண்டுகள் ஆகின்றன, அவ்வுறவு சர்வதேச சமாதான முன்னேற்றத்திற்கு ஒரு முக்கியபங்குவகித்துள்ளதுஎன அவ்வறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

மூன்றுவது உலகம், ஆயுதக் குறைப்பு, உலக வியாபாரம் ஆகிய பிரச்சினைகளில் பாம்பிடுவின் சீன விஜயத்தால், இருநாடுகளும் தங்களது கருத்துக்களை பறிமாறிக் கொள்ள முடிந்தது,

இரு நாடுகளின் உறவுகளிலும் மேலும் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது அதன் காரணமாக இருநாடுகளுக்கிடையே வியாபாரம், அதிகரிக்கவும், பொருளாதார தொழில் நுணுக்க முறைகளை பறிமாறிக்கொள்ளவும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. கடலோர வேலைகள், இரு நாடுகளுக்குமிடையே விமானப் போக்குவரத்தை அதிகப்படுத்தல் போன்ற பிரச்சினைகளில் உடன்பாடு ஏற்பட்டுள்ளது என்றும் அவ்வறிக்கை கூறுகிறது,

## லத்தீன் அமெரிக்கமக்கள்

# தேசவிடுதலை போர் ஓயாது

## ஏகாதிபத்தியம் துடைத்தெறியப்படும்

### புதுடில்லி, கல்கத்தா வரவேற்பில் காஸ்டிரோ வீரமுழக்கம்

புதுடில்லி. செப். 19—

**சிலி நாட்டின் நேர்ந்தெடுக்கப்பட்ட அலெண்டே அரசைக் கவிழ்ப்பதற்கு அங்குள்ள பாசிஸ்ட் கும்பலுக்கு அமெரிக்கா ஆதரவு கொடுத்ததை கியூபா பிரதமர் காஸ்ட்ரோ வன்மையாகக் கண்டித்தார்.**

**சிலியில் தாற்காலிகமாகப் பின்வாங்க நேரிட்டாலும், மக்களின் விடுதலைப் போர் ஒருக்கணமும் ஓயப் போவதில்லை. சிலியில் மட்டுமின்றி, லத்தீன் அமெரிக்க நாடுகள் முழுவதிலும் நடந்துகொண்டிருக்கும் தேச விடுதலைப் போராட்டங்கள், லத்தீன் அமெரிக்கக் கண்டத்திலிருந்து ஏகாதிபத்யம் அடியோடு துடைத்தெறியப் படும் வரை ஓயாது, ஒழியாது''— என்றும் காஸ்ட்ரோ இடிமுழக்கம் செய்தார்.**

கடந்த 17ம் தேதியன்று, கியூபா பிரதமர் காஸ்ட்ரோ வியட்னாம் தலைநகரான ஹனோய் நகருக்குப் போய்விட்டு தாயகம் திரும்பும் வழியில் கல்கத்தாவுக்கும் புதுடில்லிக்கும் வந்தார்.

புதுடில்லியில், பிரதமர் இந்திரா காந்தி விமான நிலையத்துக்கு வந்து காஸ்ட்ரோவை வரவேற்றார், வெளிவிவகார மந்திரி சுவரண் சிங்கும், மற்றும் ஏராளமான ராஜ தந்திரிகளும் வந்திருந்தார்கள். ராஷ்ட்ரபதி பவனில் காஸ்ட்ரோவும் இந்திரா காந்தியும் பல சர்வதேசப் பிரச்னைகள் குறித்துப் பேசினார்கள்.

#### பாசிஸ்ட் தாக்குதலுக்கு அமெரிக்காவே காரணம்

சிலி அரசைக் கவிழ்ப்பதற்கு அமெரிக்க ஏகாதிபத்தியம் என்னென்ன சதிகளில் ஈடுபட்டது என்பதை விளக்கி, அமெரிக்க சதிகளை காஸ்ட்ரோ கடுமையாகக் கண்டித்தார்.

சிலி சர்க்காருக்கு சர்வதேசக் கடன்கள் கிடைக்காதபடி அமெரிக்காதடுத்து வந்தது என்றும்— சிலி இராணுவத்துடன் அமெரிக்கா நெருங்கிய தொடர்பு கொண்டு ஆயுத சப்ளை செய்து வந்தது என்றும் காஸ்ட்ரோ கூறினார்.

ஐ.நா.பந்தோபஸ்து கவுன்சிலில், சிலி இராணுவ ஆட்சியின் அடாத செயல்கள் குறித்து கியூபா பிரதிநிதிகள் பிரச்னைகளை கிளப்புவார்கள் என்றும் காஸ்ட்ரோ கூறினார்.

பாதுகாப்பற்ற கியூபா கப்பல்கள் மீது சிலி ஆட்சியாளர்கள் தாக்குதல் நடத்தியதை வன்மையாகக் கண்டித்தார்,

#### மாவீரன் மாண்டார்

அலெண்டேயை பற்றிக் குறிப்பிடுகையில்;

''அலெண்டேக்கு

(4-ம் பக்கம் பார்க்க)

## ஸ்வீடனில் மீண்டும் சோஷல் டெமாக்ரட்டுகளின் மந்திரிசபை

ஸ்டாக்ஹோம், செப். 18—

ஸ்வீடன் நாட்டின் அரசாட்சியை 41 ஆண்டுகாலமாக ஆண்டுவந்த சோஷல் டெமாகிரட்டுகள் மீண்டும் அந்நாட்டின் கம்யூனிஸ்ட் கட்சி உதவியுடன் வெற்றி பெற்றுள்ளார்கள்.

மொத்தம் 350 பார்லிமெண்ட் தொகுதியில் சோசல் டெமாகிரட்டுகள் 156 தொகுதிகளிலும் கம்யூனிஸ்ட் கட்சி 20 தொகுதிகளிலும் வெற்றி பெற்றனர்.

இவ்விரு கட்சிகளும் கூட்டாக இருப்பதால் சோசல் டெமாகிரட்டுகள் ஒரு ஓட்டு வித்தியாசத்தில் அரசாங்கம் அமைப்பதில் வெற்றி பெற்றுள்ளனர்.

கேரள மாதர் சங்கம் சார்பில்

## அக். 2-ம்தேதி காவல் நிலையங்கள் முன் பெண்களின் 'தர்ணா'

கொச்சி, செப். 18—

கேரளத்திலுள்ள அனைத்து காவல் நிலையங்கள் முன்னரும் அக். 2-ஆம் தேதி கேரள மாதர் சங்கம் சார்பில் பெண்கள் 'தர்ணா' நடத்துவர்.

#### கே. ஆர். கௌரி

மாநிலத்தில் இன்று நடக்கின்ற போலீஸ் அடக்குமுறையை எதிர்த்தும், குறிப்பாக கிளிமானூர், கோழிக்கோடு ஆகிய இடங்களில் காவல் நிலையத்தில் பெண்கள் கற்பழிக்கப்பட்டதைக் கண்டித்தும் இந்த 'தர்ணா' நடத்தப்படுகிறது, என்று கேரள மாதர் சங்கத் தலைவி தோழர் கே. ஆர். கௌரி அம்மா எம். எல். ஏ. தெரிவித்தார்.

'தர்ணா'வை ஒட்டி செப்டம்பர் 28-ம்தேதி மாநிலமெங்கும் மாதர் சங்கம் சார்பில் ஆர்ப்பாட்டங்களும் பொதுக் கூட்டங்களும் நடத்தப்படும்.

'தங்களது மானத்தை பாதுகாக்க 'பெண்கள் அணி' அமைக்க முடிவெடுக்கப்பட்டுள்ளது என்றும் கே. ஆர். கௌரி தெரிவித்தார்.

## லாவோஸ் உடன்படிக்கை

லாவோஸ், செப் 18—

லாவோசில், வியன்டியான் அரசுக்கும் பதட் லாவோவுக்கும் இடையே ஒரு யுத்தநிறுத்த ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளது.

அவ்வொப்பந்தப்படி தேசிய யூனியன் அரசு ஒன்று நிறுவப்படும் அதில் இரு பகுதியினருக்கும் சமத்துவமான பிரதிநிதித்துவம் கொடுக்கப்படும். அவ்வரசிற்கு பதட்லாவோவைச் சார்ந்த சௌவண்ணபூமா பிரதமராக இருப்பார். சௌபானே வாங், வியன்டியான் பிரதிநிதியாகவும்இருதுணைப் பிரதமர்களில் ஒருவராகவும் இருப்பார்.

அவ்வொப்பந்தப்படி ஒரு அரசியல் ஆய்வுக்குழு பொதுத் தேர்தல் நடவடிக்கைகளை மேற்கொள்ளும். அதே சமயம், அவ்விரு பகுதிகளும் தங்களது ஏக மனதான முடிவை செயல் படுத்தும்.

# தீக்கதிர்

## அ. இ. கா. க. கூட்ட முடிவுகள்

டில்லியில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டம் பொருளாதார அரசியல் தீர்மானம் ஒன்றை இயற்றியுள்ளது. அந்தத் தீர்மானத்தின் மீது பிரதமர் இந்திராவும், மற்ற காங்கிரஸ் தலைவர்களும் பேசியிருக்கிறார்கள்.

இந்தத் தீர்மானமும், இவற்றின் மீது தலைவர்கள் ஆற்றியுள்ள உரைகளும் தற்போது நாட்டில் ஏற்பட்டிருக்கும், நெருக்கடிக்குத் தீர்வு காண எந்தப் புதிய வழியையும் காட்டவில்லை.

இரண்டு ஆண்டுக்கு முன் நடைபெற்ற அ. இ. கா. க. கூட்டத்தில் திட்ட அமைச்சர் தார் பொருளாதாரக் கொள்கை பற்றிய தீர்மானத்தைக் கொண்டு வந்து வீரமாகப் பேசியதை யாரும் மறந்திருக்க முடியாது. உணவு தானிய மொத்த வியாபாரத்தை அரசு மேற்கொள்ள வேண்டும் என்று அவர் அப்போது பிரேரணை செய்தார். பொருளாதார கொள்கை சம்பந்தமான வரையறுப்பில் தாருக்கும் சுப்பிரமணியத்துக்கும் அங்குக் கூட்டத்தில் மோதல் ஏற்பட்டது. குறுக்கிட்டுப் பேசிய பிரதமர் இந்திரா, தார் கூறியதற்கும் சுப்பிரமணியம் கூறியதற்கும் எந்த வேற்றுமையும் இல்லை என்று விளக்கம் கொடுத்தார்.

காங்கிரஸ் கட்சியை பொருத்தவரை எந்தத் தீர்மானத்தை எடுத்துக் கொண்டாலும் மக்களிடம் பிரமையை ஏற்படுத்த வேண்டும் என்பதே அடிப்படை நோக்கமாகும். தீர்மானம் அமுல் நடத்தப்படாமல் போனதற்காக யார் மீதும் நடவடிக்கை எடுக்கப்பட்டதாக வரலாறு இல்லை.

இந்நிலையில் நாவன்மை படைத்த தாருக்கு காங்கிரஸ் கொள்கைகளை விளக்கும் பணி ஒதுக்கப்பட்டு, அவரும் அந்தப்பணியை செவ்வனே ஆற்றி வந்தார்.

ஆனால் தற்போதைய டில்லி அ.இ.கா.க. கூட்டத்தில் தார் வாயைக்கூட திறக்கவில்லை.

நாட்டில் பஞ்சம் தோன்றியிருக்கும்போது மக்களுக்கு உணவு வினியோகிக்கும் பொறுப்பை எந்த ஒரு அரசும் கள்ளமார்க்கெட்காரர்களிடமும், பதுக்கல் பேர்வழிகளிடமும் விட்டு விட்டு சும்மாயிருக்க முடியுமா?

தானிய வர்த்தகத்தை அரசு மேற்கொள்ள வேண்டும் என்று முன்பு மேற்கொண்டிருந்த தீர்மானம் காங்கிரஸ் கட்சியால் மக்களுக்கு நன்மை செய்ய வேண்டும் என்ற விருப்பத்தின் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்ட தீர்மானமல்ல. நெருக்கடியின் சூழ்நிலையில் அந்தத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

அந்த தீர்மானத்திலிருந்து பின்னடைவதைத்தான் இந்திரா "நாங்கள் லட்சியத்தைக் கைவிடவில்லை. படிப்படியாக நிறைவேற்றுகிறோம்" என்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் வர்ணித்திருக்கிறார். பிரதமரின் இந்த வர்ணனைக்கு மேலாகப் பேசுவதற்கு தாருக்கே நா எழவில்லை.

தாங்கவொண்ணாத வறுமைப் படுகுழியில் விழுந்திருக்கும் மக்களைப் பார்த்து "ஒவ்வொருவருடைய வீட்டின் முன்பும் ஒரு இமயமலை இருக்கிறது. இதைத்தாண்டுவதற்கான சவாலை ஏற்போம்" என்று கூறுவதற்கு மேல் எந்த உதவியையும் அளிக்க இந்திரா முன்வரவில்லை.

உதவி அளிக்காதது ஒருபுறமிருக்க மக்களுடைய போராட்டங்களுக்கு தலைமை தாங்கும் அரசியல் கட்சிகளை அவதூறு செய்வதையும் அ. இ. கா. க. தன்னுடைய முக்கிய பணிகளில் ஒன்றாக நிறைவேற்றியிருக்கிறது.

சிண்டிகேட், சுதந்திரா, ஜனசங்கம் போன்ற பிற்போக்கு கட்சிகள் வலியுறுத்தி வந்திருக்கும் கொள்கைகளைத்தான் அ. இ. கா. க. தீர்மானம் உள்ளடக்கியுள்ளது.

இந்நிலையில் வலதுசாரி பிற்போக்கு சக்திகளின் அபாயம் பற்றி அது கூக்குரல் எழுப்பியுள்ளது.

நாட்டை இந்த நெருக்கடிக்கு கொண்டு வந்திருக்கும் கொள்கைகளை எதிர்த்துப் போராடும் கட்சிகளை இடதுசாரி அதிதீவிரவாதிகள் என்று அ. இ. கா. க. கூட்டம் அவதூறு செய்துள்ளது.

மக்களுடைய கஷ்டங்களைப் பயன்படுத்திக் கொண்டு அரசாங்கத்தின் மீது இந்தக் கட்சிகள் தாக்குதல் தொடுப்பதற்கு இடமளிக்கக் கூடாது என்றும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டம் ஒலமிட்டுள்ளது.

விலைவாசி எவ்வளவு உயர்ந்தாலும் உணவு தானியத் தட்டுப்பாட்டில் மக்கள் எவ்வளவு அவதிப்பட்டாலும் மக்களுக்கு அத்தியாவசியப் பொருள்களை வினியோகிக்கும் பொறுப்பை மத்திய அரசு மேற்கொள்ளாது என்பதை அ. இ. கா. க. தீர்மானம் தெளிவுபடுத்தி விட்டது.

உணவு தானியக் கொள்முதலை மாநில அரசுகள் மேற்கொள்ளுவதற்குக்கூட எந்தக் கண்டிப்பும் இல்லை.

நெருக்கடி நிலைமைக்கு காங்கிரஸ் கட்சி கூறும் பரிகாரம் இதைத்தாங்கிக் கொண்டு மக்கள் சும்மாயிருக்க வேண்டும் என்பதே இந்த நிலைமையில் வேலைநிறுத்தம் செய்வதற்குக் கூட உரிமை இல்லை என்பதை காங்கிரஸ் தீர்மானம் வலியுறுத்தியுள்ளது.

கூட்டத்தில் பேசியே பிரதமர் இந்திராவே அரசாங்கத்தின் சாதனை பற்றி பெருமைப்பட்டுக் கொண்டிருக்கிறார். பஞ்சத்திலும், வறுமையிலும் வாடும் மக்களுக்கு அவருடைய அரசாங்கம் அளித்திருக்கும் உதவியைப் போல உலகில் வேறெந்த அரசாங்கமும் அளிக்கவில்லை என்றும் அரசாங்கத்தின் கோதுமை கொள்முதல் திட்டம் வெற்றி பெற்றுள்ளது என்றும் கூறி இந்த சாதனையைக் குறைத்துப் பேசுவதற்கு இடமளிக்கக் கூடாது என்றும் வலியுறுத்தியிருக்கிறார்.

இந்தக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டிருக்கும் தீர்மானங்களும், பேச்சுக்களும் குமுறும் எரிமலை மீது அமர்ந்து கொண்டு காங்கிரஸ் தலைவர்கள் கனவுலகில் மிதந்துகொண்டிருப்பதையே வெளிப்படுத்தியுள்ளது.

# இந்திரா அரசு முற்போக்கா?

## வலது கம்யூனிஸ்டுகளுக்கு பி. ராமமூர்த்தி கேள்வி

கோவை, செப். 18—

**ஒரு புறம் நாட்டில் பண வீக்கம் ஏற்படுத்த—கள்ள மார்க்கெட்காரர்கள் போடும் திட்டங்களுக்கு இந்திரா அரசு உதவியாக இருக்கிறது என்று கூறிக்கொண்டு, மறுபுறம் இந்திரா அரசு முற்போக்கு அரசு என்று கூறி வரும் வலதுகளின் வாய்ப்பந்தல்களை தோழர் ராமமூர்த்தி கோவையில் நடந்த யூ. சி. டி. யூ. நிர்வாகக் குழு கூட்டத்தையொட்டி நடந்த பொதுக்கூட்டத்தில் அம்பலப்படுத்தினர். அதன் விபரம் வருமாறு:—**

தோழர்களே, எனக்கு முன் பேசிய தோழர் ஜார்ஜ் பெர்ணாண்டஸ் அவர்கள், கடந்த இரு ஆண்டுகளாக போராடி வரும் ஊழியர்களுக்கும், உழைப்பாளி மக்களுக்கும் இந்திரா அரசு கொடுத்து வரும "பரிசு"களை விளக்கமாகக் கூறினர்.

தோழர்களே, கடந்த ஆண்டு திருமதி இந்திரா காந்தி, தொழிற்சங்கங்களின் மாநாட்டைக்கூட்டி, அதில் நாட்டில் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டுள்ளது. இந்த நெருக்கடியைத் தீர்க்க, தேசபக்தி உணர்ச்சியுள்ள தொழிலாளர்களாகிய நீங்கள் 3 வருடங்களுக்கு சம்பள உயர்வு கேட்க வேண்டாமென்று கூறினர். சம்பள உயர்வு கேட்க வேண்டாமென்று கூறுகிறீர்களே, விலை உயர்வைக் கட்டுப்படுத்துங்கள் 'என்று நானும் ஜார்ஜ் பெர்ணாண்டசும் அம்மையாரைக் கேட்டபோது, அம்மையார் முயற்சிக்கிறோம் என்றார்கள். 26 ஆண்டுகளாக முயற்சி செய்கிறீர்களே, பின்னர் ஏன் விலைவாசி குறையவில்லை? விலைவாசி குறையட்டும், பின்னர் நாங்கள் வந்து உங்களைச் சந்திக்கிறோம்" என்று கூறி நாங்கள் வந்துவிட்டோம். இவ்வாறு இப்பிரச்னையை நாங்கள் ஏற்றுக்கொள்ளாதுடன் எச் எம் எஸ், ஏ ஐ டி யூ சி, ஆகிய சங்கங்களும் ஏற்கவில்லை. பிறகு மே 18-ந் தேதி, திரு எஸ் ஏ டாங்கே அவர்கள் ஒரு மாநாட்டைக் கூட்டி, அதற்கு எங்களையும் அழைத்திருந்தார். அம்மாநாட்டில் நாங்களும பங்கு கொண்டோம். அம்மாநாட்டில் "சர்க்கார் வைத்துள்ள அஜெண்டாக்கள் யாவும் தூக்கிஎறியப்பட வேண்டும். மேலும் அவைகளை முறியடிக்கத் திட்டம் வகுக்கவேண்டும். மேலும் அதைத் தொழிலாளிகளைத் திரட்டித்தான் செய்ய முடியும்.

அதற்காக ஒரு மாநாடு கூட்ட வேண்டுமென்று கூறி, அதற்காக ஒரு குழு ஏற்படுத்தி, அதில் சி ஐ டி யூ சார்பில் நானும், ஏ ஐ டி யூ சி சார்பில் மறைந்த சதீஷ் லும்பா, எச் எம் எஸ் சார்பில் மகேஷ் தேசாயையும் போட்டார்கள், இப்படி ஏற்படுத்திய அந்தக் குழு 8 மாதங்களாகக் கூடவே இல்லை. நான் பலமுறை முயற்சித்தும் பயனில்லாமல் போய்விட்டது.

இப்படிப்பட்ட நிலையில் ஒரு நாள் திடீரென்று ஏ ஐ டி யூ சி, ஐ என் டி யூ சி எச் எம் எஸ், ஆகிய தொழிற்சங்கங்கள் சேர்ந்து "தேசீய தொழிற்சங்கங்களின் கவுன்சில்" என்று ஒன்றை ஆரம்பித்தனர். இப்படி உருவான கவுன்சிலுக்கு மத்திய அரசின் வாழ்த்தும் கிடைத்தது.

சமீபத்தில் கல்கத்தாவில் நடைபெற்ற ஏ ஐ டி யூ சி, மாநாட்டில் டாங்கே தனது அறிக்கையில் கூறுகிறார், "திடீரென்று ஏற்பட்ட சம்பவமல்ல, ஏதோ புறக்கணிக்கப்பட்ட சம்பவமல்ல. காங்கிரஸ் இரண்டாகப் பிளவான பிறகு, அதில் மாறுதல் ஏற்பட்டது. 1971-ல் நடைபெற்ற தேர்தலில் அது மேலும் தீவிரமாகியது" என்று. இவ்வாறு காங்கிரசுடன் கலந்த நிலையில், மே 13-ந் தேதி நடந்த ஒன்றுபட்ட திட்டமிருக்கிறதே, அது யதார்த்தத்திற்கு மாறாக மாறிவிட்டது எனவே நாங்கள் அதை, அதாவது மே 18-ல் நடைபெற்றதைக் கைவிடவேண்டி வந்தது. இவ்வாறு ஐ என் டி யூ சி-யுடன் பேரம் பேசித் திட்டத்திற்கு துரோகம் செய்துவிட்டு ஓடியவர்தான் டாங்கே.

### இன்று வலதுசாரிகளின் நிலை என்ன?

கடந்த தேர்தல் காலத்தில் இந்திரா காந்திக்குப் பல்லக்குத் தூக்கிச்சென்று, இந்திரா காந்தியை ஜிகு ஜிகு ஜியோ என்று யுக யுகமாக வாழவேண்டி, ஊர்வலம் நடத்திய வலதுசாரிகளின் இன்றையநிலை என்ன? இன்றைக்கு, இந்திரா ஜிகு ஜிகு ஜிகு ஜியோ என்று கூறிச் செல்வார்களே ஆனல், அவர்களை இந்நாட்டு மக்கள் நையப்புடைத்துவிடுவார்கள். அந்த அளவிற்கு, இந்திராவின் முற்போக்கு இந்நாட்டு மக்கள் மத்தியில் வளர்ந்துள்ளது. இப்படிப்பட்ட நிலையில், விலைவாசி உயர்வு சம்பந்தமாக திருமதி காந்தி "வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் விலைவாசி ஏறத்தான் செய்யும்" என்று கூறுகிறார். இந்த விவாதமிருக்கிறதே இது இந்நாட்டிலுள்ள பெரு முதலாளிகளையும், கள்ள மார்க்கெட்காரர்களையும், பாதுகாக்கத்தான், நாட்டில் பண வீக்கம் ஏற்படுத்தக் கள்ள மார்க்கெட்காரர்கள் போடும் திட்டங்களுக்கு உடந்தையாக இருப்பது இந்திரா அரசுதான் என்றும், மக்கள் தேவைக்கு உபயோகிக்கப்பட்டு வரும் மூலதனத்தில் பாதிக்கு மேல் இந்த நாட்டிலுள்ள பெரு முதலாளிகளுக்குத்தான் உபயோகப்படுகிறது. என்ற பல காரணங்களை நானே ஜார்ஜ் பெர்ணாண்டஸோ—இந்திரா அரசின் மீது சுமத்தவில்லை. இவ்வாறு சுமத்துவது திரு டாங்கே அவர்கள் தான். இவ்வாறு அவதூறுகளைக் கூறிவிட்டு இந்திராகாந்தி தான் இவர்களுக்கு முற்போக்கு, இவ்வாறெல்லாம் இந்திராகாந்தியை முற்போக்கு முற்போக்கு என்று கூறினலும், இன்று நாட்டில் எழுந்துள்ள பிரச்னைகளிலிருந்தும், போராடும் மக்கள் மத்தியிலிருந்தும் எழுகின்ற போராட்டங்களையும் மூடி மறைக்க முடியாத நிலை ஏற்பட்டுள்ளது, சமீபத்தில் கூடிய இவர்களின் தேசீய கவுன்சில் கூறுவதென்ன? இன்று நாட்டில் ஏற்பட்டுள்ள பொருளாதார சீர்குலைவுக்கும், கஷ்டங்களுக்கும் காரணம் இந்தியசர்க்காரும், ஆளுகின்ற இ. காங்கிரஸ் கட்சியுமேயாகும், இதன் ஸ்திரமற்ற கொள்கையால், கண்மூடித்தனமான நோட்டடிப்பால் கருப்புப்பண பேர்வழிகளுக்குத் தான் உதவியளிக்கிறது இது வலதுசாரி சக்திகளுக்கு உதவியளிப்பதாகும் என்றும், நாட்டில் ஏற்பட்டுள்ள நெருக்கடிக்கு முக்கியப் பொறுப்பு முதலாளித்துவ இந்திரா ஆட்சிதான் காரணம் என்று கூறும் வலதுகளே! இவர்களை எதிர்த்து நின்று போராட் எங்களுடன் ஏன் வரவில்லை என்று கேட்டால், காங்கிரசிற்குள் முற்போக்கு சக்திகள் உள்ளன. அவர்களுடன் சேர்ந்து இந்நிலைகளை எதிர்க்கிறோம் என்கிறார்கள்.

இப்படிப்பட்ட நிலையில்தானே மேற்கு வங்க பந்த ஜூலை மாதம் 27-ல் நடைபெற்றது. அச்சமயத்தில் வலது கம்யூனிஸ்ட்களுக்கு செம்மையாக உதை கிடைத்தது. அவர்களது தலைவர்களில் ஒருவரான திருமதி ரேணு சக்சரவர்த்தியை சேலையை உரிந்து, நடு ரோட்டில் அவமானபடுத்தி தாக்கியது இ காங்கிரஸ்தானே. இப்படிப்பட்ட அநாகரீகச் செயலை முற்போக்கு இ காங்கிரஸ் தலைவர்கள் யாராவது ஒருவர் கண்டித்து அறிக்கை விட்டதுண்டா? மார்க்சிஸ்ட் கட்சிதானே இதை கண்டித்தது. இப்படி கேடுகெட்ட அரசியல்நிலைக்கு வலதுசாரி கம்யூனிஸ்ட்கள் போனது ஏன்? இப்படி உழைப்பாளி மக்கள் பிரச்னையானலும சரி, பொது மக்கள் பிரச்னையானலும் சரி, இந்த வலதுசாரிகள் துரோகமிழைத்து வருவது தானே சரித்திரம். ஆகவே இககட்சியின் தலைமையின் கீழ் உள்ள ஊழியர்கள், சிந்தித்துப் பார்த்து, தலைமையைத் தூக்கி எறிந்துவிட்டு யூ சி டி யூ வின் தலைமையில் நடைபெறும் போராட்டங்களை வெற்றி பெறச் செய்ய ஒத்துழைக்க வேண்டும என்று கூறி விடை பெற்றார்.

# பந்த்-அர்த்தால்

## மேட்டூர் ஸ்தம்பித்தது

மேட்டூர், செப். 17—

பந்த் நாளான செப்.13 ல் மேட்டூர் நகரத்திலும் அதைச் சுற்றியுள்ள எல்லா கடைகளும் அடைத்திருந்தன டவுன் பஸ் சர்வீஸ், லாரி ஏதும் ஓடவில்லை.

தொழிற்சாலைகள், மேட்டூர் ஒர்க்ஷாப், மேட்டூர் ஸபின்னிங், கால்வாசிங் பிளாண்ட, அலெக்ஸாண்டர் பின்லே ஆகிய தொழிற்சாலைகள் பூரணமாக வேலை நிறுத்தம் நடைபெற்றது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, வலது கம்யூனிஸ்ட் கட்சி தோழர்களை 12-9-73 தேதியே கைது செய்தனர். பிரதேச கமிட்டி உறுப்பினர்கள் தோழர்கள கே. ஆர். வேல்முருகன், வி. கே. முருகேஷன், ஏ. சடையன் உள்பட மொத்தம் 17 பேர்கள் கைது செய்யப்பட்டனர்.

மேட்டூர் வட்டாரத்தில் எந்த அரசியல் கட்சிகளையும் சாராதவர்களையும நடைபாதையில் நடந்து கொண்டிருந்தவர்களையும (11—9—73-ல் டவுன் பஸ்ஸிற்கும் வெளியூர் செலவதற்கு நின்றுகொண்டிருந்தவர்கள் தோழர் வி. அழகப்பன், எஸ். ஏ. நடராசன்) 12—9—73 இரவு எட்டு மணிக்கு வெளியில சென்றவர்களையும் கைது செய்து சேலம் மத்திய சிறைக்கு 13-9-73 காலையில் கொண்டு செல்லப்பட்டார்கள்.

ஐ என் டி யூ சி, எச் எம் எஸ் தி மு க ஆகிய சங்கங்களை சேர்ந்தவர்கள் வேலைக்குசென்றும்தொழிற்சாலைகள் சரியாக இயங்கவில்லை.

### ஆத்தூர்

ஆத்தூர் தாலுகாவும் நகரமும பூரண முழு கடையடைப்பு நடைபெறறது.

நகரத்தில் எந்த கடைகளும் திறக்கப்படவேயில்லை வெளியூரிலிருந்து வரும் பஸ்கள வரவில்லை. உள்ளூர் பஸ்களும் போகவில்லை.

### சங்ககிரி

சங்ககிரி நகரில் பூரண கடையடைப்பு நடைபெற்றது. முன் கூட்டியே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தோழர்கள் 11—9—73 நள்ளிரவிலேயே கைது செய்யப்பட்டனர். விஜயப்பன், கருணாகரன், பீலீஸ், வெங்கிடாச்சலம், பால்ராஜ் ஆகிய தோழர்களை கைது செய்து சேலம் மத்திய சிறைக்கு கொண்டுசென்று உள்ளார்கள்.

### பந்திற்கு முன் நடந்த தர்பார்!

13ந் தேதி பந்திற்கு முன்பு மாயூரம் தாலுக்காவிலும் நகரத்திலும் பலர் கைதாயினர் விபரம்.

மாயூரம் தோழர் இ, சி. ராஜூ ஆக்கூர் தோழர்கள் தாலுகா கமிட்டி உறுப்பினர் திருமேனி உள்பட 8 பேர் திருக்கடையூர் மணல்மேடு ஊராட்சிமன்ற தலைவர் தோழர் எத்திராஜ் கைது.

பிள்ளை பெருமாநல்லூர் ஊராட்சி மன்ற தலைவர் தோழர் வீராசாமி கைது.

மாத்தூரில் 1 தோழரும் தலைச்சங்காட்டில் 8 தோழரும் கைது செய்யப்பட்டார்கள்.

### ஓடைப்பட்டியில்

ஓடைப்பட்டி நகர் பஞ்சாயதுப் பகுதியில் மார்க்சிஸ்ட், அண்ணா தி. மு க., இருகட்சி கூட்டு நடவடிக்கையால் பூர்ண அர்த்தால் அனுஷ்டிக்கப்பட்டது. உயர்நிலைப்பள்ளி, ஆரம்பப்பள்ளிகள் மூடப்பட்டு அர்த்தால் முழு வெற்றி கிடைத்தது.

### செங்கோட்டை

செப்டம்பர் 13-ம் தேதி தமிழகம தழுவிய பொது அர்த்தால் வேலை நிறுத்தம அறை கூவலுக்கிணங்க செங்கோட்டை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தொழிற்சங்கங்கள் சார்பாக வால்போஸ்ட், துண்டு பிரசுரங்கள் மூலம் மக்களுக்கு பிரச்சாரம செய்யப்பட்டது.

இங்கு அனைத்துக் கடைகளும் மூடப்பட்டன, பஸ்கள் ஒன்றும் ஓடவில்லை, பள்ளிக்கூடங்கள் அனைத்தும் மூடப்பட்டன. இங்குள்ள மில்லில் ஐ என் டி யூ. தி மு க, வைச்சோங் தொழிலாளர்கள் தவிர 80 சதமானம் பேர் வேலை நிறுத்தத்தில் கலந்து கொண்டனர்.

ஐ என் டி யூ, தனது பாரம்பரியத்துக்கிணங்க தொழிலாளர்கள் மத்தியில் கருங்காலியே வேலை செய்தது.

### மன்னைத் தாலுகா

மன்னார்குடி தாலுகாவில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, இந்திய கம்யூனிஸ்ட் கட்சி, அண்ணா தி மு க ஆகிய கட்சிகள் இணைந்து செப் 13 ல் நடத்திய 'பந்த்' முழு வெற்றியடைந்துள்ளது. நகரங்களில் போக்குவரத்துகள் ஸ்தம்பித்திருந்தன. ஒரு பஸ்கூட ஓடவில்லை லாரிகள் டாக்சிகள் இவைகள் எதுவுமே ஓடவில்லை. கடைகள் அனைத்தும் மூடப்பட்டன. எந்தக் கடையும் திறக்கவில்லை.

அதேபோல் கிராமப்புறங்களில். விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் யாரும் வேலைக்காக வயல் பக்கம செல்லவில்லை. கிராமப்புறங்களில் உள்ள கடைகளும் மூடிவிட்டார்கள்- இபபடியாக எல்லாத் தரப்பிலுமுள்ள தொழிலாளர்களும் உரிமையாளர்களும வியாபாரிகளும் விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும். பொது மக்கள் அனைவரும பந்திற்கு ஆதரவு தரும் பொருட்டு வேலைநிறுத்தம் செய்து எல்லோரும் வீட்டில் இருந்தனர். சினிமா கொட்டகைகளில் சினிமா காட்சிகள் நடைபெறவில்லை.

குறிப்பாக தமிழக அரசின் சோழன் போக்குவரத்துக் கழகத்தை சேர்ந்த பஸ்கள் ஒன்று கூட ஷெட்டை விட்டு வெளியே

(3-ம் பக்கம் பார்க்க)

முஸ்லிம் லீக்

உ. பி. யில் **பிற்போக்கா?** | கேரளத்தில் **முற்போக்கா?**

## இந்திரா காந்தியின் புரட்டு

முஸ்லிம் லீகின் வகுப்பு வாத அரசியல் பற்றி பிரதம மந்திரி இந்திரா காந்திக்கு ஞானோதயம் பிறந்துள்ளது.

வகுப்புவாதத்தை எதிர்த்து மகத்மா காந்தி போராடினர் கணேஷ் சங்கர் வித்தியார்த்தி உயிரை விட்டார். மீண்டும் வகுப்புவாத அபாயம் தலைதூக்க விடலாமா என்று அவர் டில்லி அ. இ. கா. க. கூட்டத்தில் கேள்வி கேட்டுள்ளார். குறிப்பாக முஸ்லிம் லீக்கைக் குறிப்பிட்டு அவர் பேசியிருக்கிறர்.

மக்களிடையே வகுப்புவாத விஷத்தை முஸ்லிம்லீக் விதைத்து வருவது அறியாமையினலா அல்லது வேண்டுமென்றே செய்கிறதா என்று கேள்வி கேட்டிருக்கிறர்.

கேரளத்தில் முஸ்லிம் லீகுடன் கூட்டுச்சேர்ந்து கொண்டிருக்கும்—ஆளும் கூட்டணியைக் காப்பாற்ற முஸ்லிம் லீகின் நிபந்தனையையேற்று நேருவின் வாழ்க்கைச் சரிதமான "பாரத ரத்னு" புத்தகத்தையே பிள்ளைகளுக்குப் பாடப்புத்தகமாக வைக்காமலிருக்க ஒப்புக்கொண்டிருக்கும் இந்திரா காந்திதான் முஸ்லிம் லீகின் வகுப்புவாத அரசியல் பற்றி பேசுகிறர்.

பூனை கண்ணை மூடிக்கொண்டால் உலகமே இருண்டுவிடுமா?

முஸ்லிம் லீகை இந்திராகாந்தி எதிர்த்துப் பேசியிருப்பதேன்?

அவருடைய சொந்த மாநிலமான உ.பி யில் முஸ்லிம்லீக் ஜனசங்கத்துடன் சேர்ந்துகொண்டு காங்கிரசை எதிர்க்கிறது.

உடனே முஸ்லிம்லீகின் வகுப்புவாதம் பற்றி இந்திராவுக்கு ஞானோதயம் ஏற்பட்டுள்ளது.

உ. பி. யிலும் முஸ்லிம் லீக் காலை விரித்து வருவதாகக் அவர் கண்டித்திருக்கிறர்.

கேரளத்தில் காங்கிரசுடன் கூட்டுச் சேர்ந்தால் முஸ்லிம் லீக் முற்போக்குக் கட்சியாம் உ. பி. யில் காங்கிரசை எதிர்த்தால் வகுப்புவாதக் கட்சியாம்.

கேரளத்தில் முஸ்லிம்லீகுடன் கூட்டுச் சேர்ந்து ஏன் என்பதற்கு அவர் கூறும் காரணம் என்ன தெரியுமா? அப்போது முஸ்லிம் லீக் எந்த வகுப்பு வாத நடவடிக்கையிலும் ஈடுபடாது என்றுதான் நிச்சயப்படுத்திக் கொண்டதாக இந்திரா காரணம் கூறுகிறர்.

தன்னுடைய சந்தர்ப்பவாத நிலையை மறைத்துக் கொள்ள கேரளத்தில் தற்போது முஸ்லிம் லீகின்போக்கு எப்படியிருக்கிறது என்பதைத் தீர்மானிக்கத்தனக்கு நிபுணத்துவம் இல்லை என்றும் கூறிக் கொள்ளுகிறர் அதே மூச்சில் உ. பி. யில் முஸ்லிம் லீகின் நடவடிக்கைகளை வகுப்புவாதமானது என்றும் வர்ணிக்கிறர்.

மேலும் கேரளத்தில் முஸ்லிம் லீகுடன் கூட்டுச்சேரத் தீர்மானம் செய்யப்பட்டது ஒன்றுயிருந்த காங்கிரஸ் கட்சியால் செய்யப்பட்ட முடிவு என்று கூறி அந்த முடிவுக்கும் தனக்கும் சம்பந்தமில்லாததுபோல பாவனைசெய்து கொள்ளுகிறர்.

அரசியல் புரட்டில் இந்திராவுக்கு நிகர் இந்திராவே என்பதற்கு வேறெந்தச் சான்றும் வேண்டுமா?

# வினேபாபாவே பாட - டாட்டா தாளம் போட!

போகாத ஊருக்கு வழியைக் கண்டு பிடிக்க ஒரு மாநாடு நடந்தது. அது மூன்று தினங்கள் —செப்டம்பர் 8, 9, 10 தேதிகளில் நடந்தது. அது மகாராஷ்டிர மாநிலத்தைசேர்ந்த வர்தாவில் நடந்தது. வர்தாவுக்குப் பக்கத்தில் உள்ள சேவா கிராமம் என்ற ஊரில்தான் மகாத்மா காந்தி அவர்கள் தனது இருப்பிடத்தை அமைத்துக்கொண்டு இருந்தார்—அவரது வாழ்க்கையின் பிற்பகுதியில். அங்குதான் தற்சமயம் வினேபாபாவே தங்கியிருக்கிருர்கள். அவரது யோசனைப் படிதான், திரு ஸ்ரீமன் நாருயணன் என்பவர் — இவர் குஜராத்தின் கவர்னராக இருந்தவர் — இந்த மாநாட்டுக்கு ஏற்பாடு செய்தார்.

"காந்தீய வழியிலே" நிலப் பிரச்னைக்குத் தீர்வு காண நாடெல்லாம் பாத யாத்திரை செய்தார் வினேபாபாவே. "பூதானம்" பெற்ருர். "கிராமதானம்" பெற்ருர். பல மாநிலங்களில் பல நூறு கிராமங்களையே கிராமதானமாகப்பெற்று நிலப்பிரச்னையைத் தீர்த்துவைத்துள்ளார்! சர்வோதயக் கோட்பாடுகளின்படி, அந்த கிராமங்களில் எல்லாம் மக்களாட்சி நடந்துவருகிறது! எங்கெங்கு இப்படி அற்புதம் நடக்கிறது என்று என்னைக் கேட்காதீர்கள். பக்கத்தில் யாராவது சர்வோதயவாதி இருந்தால் அவரைக் கேட்டுப்பாருங்கள். இல்லாத இந்த ஊர்களை ஒரு வேளை உங்களுக்கு காட்டலாம். இல்லாத கடவுளைக் காட்ட எத்தனை எத்தனை "பெரியோர்கள்" இருக்கின்றனர்? அப்படி இல்லாத இந்த அற்புதத்தைக் காட்டக்கூடிய சிலர் இருக்கலாமல்லவா?

## வினேபாவின் மாநாட்டில் டாட்டாவும் சுப்ரமணியமும்

காந்தீய வழியிலே நிலப்பிரச்னைக்கு தீர்வு கண்டு முடித்துவிட்ட வினேபாபாவே அவர்கள் தற்சமயம் காந்திய வழியிலே தொழில்களை நடத்துவது பற்றி ஆராய்ச்சி நடத்த இந்த மாநாட்டைக் கூட்டச் செய்தார். மாநாடு கூடியது மத்தியிலே தொழில் அமைச்சராக இருக்கும் 'நமது" சி.சுப்பிரமணியம் ஆஜராகியிருந்தார், பெரிய முதலாளி திரு. நவல் டாட்டா அவர்களும் ஆஜாராகியிருந்தார்கள்! குரு பீடத்திலிருந்து என்ன "அருள் வாக்கு" வரப்போகிறது என்று எதிர்பார்த்து நின்றனர். தற்சமயம் காந்தீயத்தின் குருபீடம், சேவாகிராமம்தானே அங்குகொலு வீற்றிருக்கும் 'பெரியவாள்' வினேபாபாவேதானே? "உற்சவராக" ஊரெல்லாம் சுற்றி முடிந்தபின் தற்சமயம் மூலவராக" ஆசிரமத்தில் வீற்றிருக்கிருர் அவர். தொழில் வளர்ச்சிக்கும் விஞ்ஞானத்துக்கும், தொழில்—நுணுக்க அறிவுக்கும் அமைச்சரான சுப்பிரமணியம், ஆச்சார்யாரின் அருள்வாக்கிலிருந்து குறிப்புகள் எடுத்துக்கொள்ள எத்தனை எழுத்தர்களையும், சுருக்கெழுத்தர்களையும் கொண்டு போனுரோ நமககுத் தெரியாது.

8-ம் தேதியன்று வினேபாபாவே உரையாற்றினர். காநதீய தத்துவப்படி தொழில்களில தர்மகாத்தா முறையைப் நடைமுறைப்படுத்த முடியும் என்ருர் அவர். அவ்வாறு செய்வது மக்களுக்கு மிகுந்த பயனுள்ளதாக இருக்கும் என்ருர் அவர். வினேபா அவாகள் மகாத்மா காந்தியின் இந்த தர்மகர்த்தா முறையை பற்றி விரிவாகஎடுத்துரைத்தார், இதனை அமுல்படுத்துவதன் மூலம சமுதாயத்தின சமூக—பொருளாதார அமைப்பில் பெரிய முன்னேற்றம ஏற்படும என்ருர். (இந்த 'தர்மகர்த்தா முறை" பற்றி ஏற்கனவே நான் எழுதிய கட்டுரையை வாசகர்கள நினைவில்கொண்டிருப்பார்கள் என்று எண்ணுகிறேன்.)

## வினேபா கூறும் ஐந்து சக்திகள்

இந்தத்திட்டத்தை ஐந்து சக்திகளின் துணைகொண்டு வெற்றிகரமாக நிறைவேற்றலாம் என்ருர் பாவே அவாகள். கையில் உள்ள ஐந்துவிரல்களும்இணைந்து செயல்படுவதைப் போல் சமுகததில உள்ள ஐந்து சக்திகள் இணைந்து செயல்பட வேண்டுமாம். அந்த ஐந்து சக்திகள் எவை?

1) ஜனசக்தி—பொது மக்களாம்.

2) சத் ஜனசக்தி—நல்லவர்கள் சக்தி...சான்ருேர் சக்தியாம்.

3) வித்வ ஜனசக்தி — அறிவாளிகளின் சக்தியாம்.

4) மகா ஜனசக்தி — முதலாளிகள் வர்த்தகர்கள்ஆகியோரின் சக்தியாம்.

5) பெயரில்லாதது—அது அரசின் அதிகாரமாம்,

சமுதாயம். பொதுவாக இரண்டுவர்க்கங்களாகப் பிரித்திருப்பதையும, அவை இரண்டும ஒன்றுகொன்று முரண்பட்ட நலன்கள் கொண்டவை எனபதையும், அங்கீகரிக்காதவர்கள் இந்த காந்தீயவாதிகள். அந்த அடிப்படை உண்மையை மறுக்க, அல்லது மறைக்க, பலவித மான சாமர்த்திய வாதங்களை முன் வைக்கின்றனர். எனவேதான் தொழிலாளி வர்க்கம், முதலாளி வர்க்கம் என்ற சொற்களைக் கண்டு பயந்து ஒதுங்குகின்றனர்.

### "மகாஜனம்"

வினேபாவின் இந்த 5 சக்திகளையும் இன்னும் நெருக்கமாக பரிசீலிப்போம்.—அவர் எதை மகாஜன சக்தி என்கிருர்?—முதலாளிகளையும்,வர்த்தகர்களையும். இவர்களைத்தான் "மகாஜனம்" என்று அழைக்கிருர் வினேபா! இது சுரண்டல் வர்க்கத்துக்கு அவர் தரும் பெயர்.

### "வித்வஜனம்"

— அடுத்து "வித்வஜனம்" என்பதை எடுத்துக் கொள்வோம். இது விஞ்ஞானிகள், தொழில் நுணுக்க வல்லுனர்கள்... பொதுவாக அறிவாளிகள். தனிவுடமை என்பது சாஸ்வதமானது என்ற கருத்திலே வளர்க்கப்பட்டு தனிவுடைமைக்குச் சாதகமான கல்வி புகன்று. தனி உடமையின் காவலர்களாக விளங்கும் இந்த அறிவாளிக் கூட்டம்—பொதுவாகப் பார்க்கும்போது — சுரண்டல் கூட்டத்திற்கு அனுசரணையானதே. "மகாஜனங்'-களுக்கு வக்காலத்து வாங்குபவர்களே இந்த "வித்வஜனம்".

### "சத்ஜனம்"

அடுத்து "சத்ஜனம்" என்பதைப் பார்ககலாம். இந்த "சத்ஜனம்" என்பது யார்? முனிவர்களாக,-ஸ்வாமிமார்களாக சன்னியாசிகளாக தோற்றமளித்து, வறுமையிலும்,பசியிலும் உழன்றுகொண்டிருக்கும் சாமான்யர்களுக்கு—உழைத்து உழைத்து ஓடாகிக் கொண்டிருக்கும் பெருமபான்மையினருக்கு-"ஆசை பொல்லாது" என்றும், "உன் கடமை பணி செய்து கிடப்பதே" என்றும் "இந்த உலகமே பொய்யடா, உன் காயமும் பொய்யடா" என்றும்.........உபதேசித்து, இன்றுள்ள சமுதாய — பொருளாதார அமைப்பை எதிர்க்காமல் பார்த்துக் கொள்பவர்கள்.

இந்த உபதேசியர்கள்தான் சத்ஜனம் என்ற சான்ருேர்கள்! 'காஞ்சி'ப் பெரியவாள் என்றும், 'காமகோடி'ப பெரியவாள் என்றும், 'சிருங்கேரி' பெரியவாள் என்றும், 'பூரி' பெரியவாள் என்றும் (சின்னப் பெரியவாள்களுடன் சேர்ந்து) —தர்மபுர சன்னதிகள் என்றும், திருப்பனந்தாள் சன்னதிகள்என்றும். திருவாடுதுறை சன்னதிகள் என்றும்—கார்டினல் கிரேசியஸ் என்றும், ஆர்ச்பிஷப் வில்லியம் என்றும்—மௌல்வி அப்துல்லா என்றும், மௌல்வி இபுராகிம் என்றும்—கிருபானந்தவாரியார் என்றும்,பாலகிருஷ்ண சாஸ்திரி என்றும் — வினேபாபாவே என்றும்...சுரண்டல் அமைப்பைக்கட்டிக்காக்கும் சான்ருேர்கள்!...சத்ஜனங்கள்,

### "ஜனசக்தி"

முதலாளி வர்க்கம் என்பதை சாமர்த்தியமாகப் பிரித்து 3 தனித்தனி சக்திகளாககாட்டுகிருர். இந்த மூன்றும் அடிப்படையில் ஒன்று என்பதை மறைக்கும் முயற்சி— இந்த மூன்றும ஒன்றுக்கொன்று துணை என்பதை மறைக்கும் முயற்சி— இந்த மூன்றைப் போலவே அடுத்து வரும் நான்காவதும் ஒரு சக்தியாம— இவற்றுடன் இணைந்து— இவற்றுடன் மோதாமல், அனுசரித்துப் போகும் ஒரு சக்தியாம்...... அதுவே... அந்த வெறும் ஜனசகதி...... அடைமொழியில்லாத ஜனசக்தி.

அந்த ஜனசக்தியில் அந்த 'ஜனம்' யார்? "மகாஜனம்" என்ற முதலாளிகளும், வர்த்தகர்களும் போக, "வித்வ ஜனம்"என்ற முதலாளிவர்க்க அறிவாளி கூட்டம் போக, "சத்ஜனம்"என்ற சுவாமி மார்களும். குருமார்களும், மதப் பிரச்சாரர்களும, உபதேசிகளும போக......மிஞ்சுவது எது? உழைப்பை விற்று பிழைப்பது தவிர வேறு வழியில்லாத உழைப்பாளி வர்க்கம். இந்த உழைக்கும் வர்க்கத்தைத் தான் 'ஜனம்' என்ற "பொது" சொல்லால் மூடி மறைககிருர்கள்.

இந்த நான்கும் போக 5-வது சக்தி என்பது அரசாங்க அதிகாரம் என்பதாம். இதற்கு ஒன்றும் பெயர் சூட்டவில்லை வினேபாபாவே. இந்தப் பெயரில்லாத 'அப்பாவி' என்ற அரசாங்க அதிகாரத்தையும் சேர்த்து ஐந்து சக்திகளும் ஒன்றுக்கொன்று துணையாம— கையில் உள்ள ஐந்து விரலகளைப் போலே, என்கிருர். இவ்வாறு கூறுவதன்மூலம் இந்த அரசாஙகம என்பதே சுரண்டும் மகா ஜனத்தின் ஏஜெண்டு எனபதையும் சுரண்டப்பட்ட ஜனததை ஒடுக்கவே உருவாக்கப்பட்ட கருவி எனபதையும், அதுபலாத்கார சொரூபமான அமைப்பு என்பதையும் மூடி மறைக்கிருர் வினேபாபாவே. அரசு என்பது எல்லாத் தரப்பு மக்களுக்கும் "பொதுவான, பாரபட்சமற்ற, நடுநிலையில் உள்ள" அமைப்பு என்ற பிதத லாட்டப் பிரச்சாரம் எத்தனையோ நூற்ருண்டுகளாக நடத்தப்பட்டு வந்துள்ளது. அதே செப்படி வித்தையை இன்னும நாசூக்காகச் செய்கிருர் வினேபாபாவே.

ஐந்து சக்திகளும், ஐந்து விரல்களைப் போலே, இந்த விரல்களில் ஒன்றுக்கொன்று போட்டி உண்டா? இவற்றில் ஒன்றுக்கொன்று முரண்பாடு உண்டா? இல்லவே இல்லை. அவை ஒன்றுக்கொன்று இசைவாக இணைந்து செயல்படுபவை...... அதைப்போன்றே சமுதாயத்தில் இந்த ஐந்து சக்திகள்... இவற்றினுள் முரண்பாடு என்பதே இல்லை. இவை ஒன்றுக்கொன்று இசைவாக இணைந்து செயல்படுபவை...... புரிகிறதா செப்படி வித்தையின் நோக்கம்? வர்க்கங்கள் இல்லை, வர்க்கப் போராட்டங்கள் இல்லை. அதனை எடுத்துரைக்கும் மார்க்சிசம் பொய்! இதுவே காந்தீயம் என்ற தத்துவத்தின் இன்றைய குருபீடத்தில் கொலுவீற்றிருக்கும் பெரியவாள் ஆச்சார்யா வினேபாபாவேயின் உபதேசம்.

### "அனுமிகா"

இன்னும் பாருங்கள். "ஜன"சக்தி என்று உழைப்போரையும், "மகாஜன" சக்தி என்று முதலாளிகளையும், "வித்வ



ஏ. பாலசுப்ரமண்யம்

ஜன"சக்தி என்று முதலாளித்துவ அறிவாளிகளையும், "சத்ஜன சக்தி" என்று வர்க்க சமரச உபதேசியார்களையும் பெயர் சூட்டி அழைத்த ஆச்சார்யா வினேபாபாவே அவர்கள் அரசாங்க அதிகாரம் என்பதற்கு பெயர் சூட்டவில்லை. அதற்கும் அழகாக விளக்கம கொடுத்திருக்கிருர்கள் ஆச்சார்யார். கை விரல்களில் உள்ள சுண்டுவிரலுக்கு அடுத்ததை தமிழில் மோதிர விரல் என்கிருேம், வடமொழியில் அந்த விரலுக்கு பெயர் இல்லை. அதனை "அனுமிகா" என்று அழைக்கிருர்கள். அதாவது, பெயா இல்லாதது என்று பொருள்.

இந்த 'அனுமிகா' என்ற விரல் அதிக உபயோசம் இல்லாத விரல். மற்ற நான்கு விரல்களுடன் ஒப்பிட்டுப்பார்க்கும் பொழுது, 'அனுமிகா' அதிக பயனில்லாத ஓர் உறுப்பு,

அந்தப் பெயரில்லாத விரல் எப்படி அதிகப் பயனில்லாத உறுப்போ அதைப் போல் அரசாங்கம் என்பதும் அதிகம் உபயோகபபடாத, அதிகம் பயன்படுத்தபடாத உறுப்பாக இருக்கவேண்டும்...... என்ன? புரிகிறதா?...ஆம்... அரசு கூடுமான வரை எதிலும் தலையிடக்கூடாது. க்ஷேம நல அரசு என்று சொல்லிக் கொண்டு பல்வேறு பொறுப்புகளை இழுத்துப் போட்டுக்கொள்ளக் கூடாது. அதையெல்லாம் "மகாஜன"த்துக்கும் அதன் எடுபிடிகளான 'வித்வஜன"த்துக்கும் விட்டுவிடவேண்டும்...அதாவது தனியார் துறைக்கு விட்டுவிடவேண்டும். தொழில் நடததுகிருேம் என்றும், வியாபாரம் நடத்துகிருேம் என்றும், மாதிரிப் பண்ணைகள் நடத்துகிருேம் என்றும் ... அது என்றும் இது என்றும... ஒன்றும் செய்யக்கூடாது. சட்டத்தையும் ஒழுங்கையும் மட்டும் பராமரிக்க தடியும் கையுமாக நிற்கவேண்டும் இந்த அரசு. சுரண்டல்காரர் "மகாஜனங்,களின் நலன்களுக்கென்று அவர்களும் அவர்களது "வித்வ ஜன"ங்களும் செய்துவைக்கும் **சட்டத்தையும்,** சுரண்டல் செம்மையாக, சீராக நடக்க உதவும் **ஒழுங்கையும்** காப்பதே அரசின் வேலை, வேறு எதிலும அரசு தலையிடலாகாது. இதுவே ஆச்சாரியரின் அருள் வாக்கு. இதுவே காந்தீயத்தின் தத்துவ விளககம். மறைந்துபோன சுதந்திராக் கட்சியின மூலவா ராஜாஜி அவர்கள் உடதேசித்து வந்ததும இதுவேதான்.

## காந்தியின் சமுதாயக் கண்ணேட்டம் பிற்போக்கானது

இந்த நஞ்சைத்தான் நமக்குத் தருகிறது காந்தீயத்தின் குருபீடம். அது ஒன்றும் வினேபாபாவேயின் "துர்வியாக்கியானம்" அல்ல. அது காந்தீயத்தின் உட்பொருள். மகாத்மா காந்தி நாட்டின் விடுதலை இயக்கத்துக்கு ஒரு புது உத்வேகத்தைத்தந்தவர். பாரதத்தின் எளிய மக்களையெல்லாம் கவர்ந்து விடுதலைப் போரில் பங்கு வகிக்கச் செய்த தளபதி... ஆனல் அவரது சமுதாயக் கண்ணேட்டம். அவரது தத்துவ விளக்கங்கள் அனைத்தும பிற்போக்கானது. வரலாற்றுப் படிப்பினைகளை உணராதவை,வரலாற்றின் போக்கை மறுத்தவை; பொய்யானவை; ஆகவே நடைமுறையில் தோற்றுப் போனவை.

இங்கு நான் 4, 5 தினங்களுக்கு முன் படித்த ஒரு அழகான கவிதை நினைவுக்கு வருகிறது. 1973-ம் ஆண்டு ஆகஸ்டு மாத இதழில, "கண்ணதாசனில்" இந்தக் கவிதை வெளிவந்துள்ளது (கண்ணதாசன் என்று ஒரு மாத இலக்கிய' இதழ் வருவது வாசகர்களுக்குத் தெரிந்திருக்கலாம் கவிஞரின் பெயர் "தத்துவன்" என்று தரப்பட்டுள்ளது, 75-ம் பககத்தில் அக்கவிதை தரப்பட்டுள்ளது. அதன் தலைப்பு "கொக்கிற்கும் மீனிற்கும் பொது அறம் உண்டோ"? என்பது அதில் கவிஞன் கேட்கிறேன்—

குளத்தங்கரையில் கொடுந்தவம் செய்யும்
கொக்கின் சிந்தனையும்—வெள்ளைக்
கொக்கின் சிந்தனையும்.—குளத்தில்
குறுக்கும் நெடுக்கும் நீந்தித்திரியும்
மீனின் சிந்தனையும்,
ஒன்றேயாக இருக்கும் என்பது
உண்மை நிலையாமோ?—உலகின்
உண்மை நிலையாமோ?—அதனை
ஒன்றேயாக உணர்பவர் எல்லாம்
உண்மை ஞானிகளோ?

காந்தீயத்தின் இன்றைய பிரதம விரிவுரையாளரான வினேபாபாவே எந்தவித மான ஞானத்தின் பாற்பட்டவர்கள் என்பதற்கு இதற்குமேல் விளக்கம் வேண்டுமா? அழகாக, எளிமையாக, பயங்கரமாக, அது என்ன என்று விளக்கி விட்டான கவிஞன்!

## அடடா என்ன பெரிய மனிதன்!

"மகாஜனம்" என்ற கொக்கு' "வித்வ ஜன"ங்களின்ஆலோனைகளுடன், சத்ஜனங்களால் ஏமாற்றப்பட்டு வரும் வெறும ஜனங்களான மீன்களைத்தின்று கொழுக்க அரசாங்கம் என்ற "அனுமிகா" அவ்வப்போழுது' கடியைக்காட்டி இந்த வெறும் ஜனங்களை மிரட்ட...... ஆகா என்ன ஏற்பாடு, என்ன ஏற்பாடு பார்த்தீர்களா? இதற்கு என்ன பெயர்? வெறும் ஜனத்துக்கு மகாஜனம் **தர்மகர்த்தா!** செய்யும் பாவத்தை மறைக்க, சில சமயம் இந்த மகாஜனம் சத்திரத்தைக் கட்டும்; ஒரு சாவடியைக் கட்டும்; மதுரைக்கு வந்து மீனுட்சியம்மனை தரிசிக்க வரும் பக்தகோடிகளுக்காக ஒரு பிர்லா- விஷ்ரம்மைக்கட்டும... ஒரு குளத்தை வெட்டும்... சில சமயம் சில ஆயிரம் பேர்களுக்கு அன்னதானம் போடும, ஒரு பள்ளிககூடத்தைக்கட்டும்; ஒரு கல்லூரிக்கு நன்கொடை தரும். மடங்களை, குருபீடங்களை நிறுவி, மடாதிபதிகளையும், குருமார்களையும் நன்ருக போஷிக்கும்... "அடடா... என்ன பெரியமனிதன்! எப்பேர்ப்பட்ட கொடை வள்ளல்... புண்ணியாத்துமா..." என்று பெயரும் தட்டிக்கொள்ளும்.

இவ்வளவு அருமையான பாட்டை இத்தனை சிறப்பாகப் பாடினுல், டாட்டா தாளம்போடாமல் என்ன செய்வார் பாவம்! இந்த மாநாட்டில் உரை நிகழ்த்திய டாட்டா அவர்கள்கூறியுள்ளார்கள். "வினேபாபாவே அவர்களது அணுகுமுறையில் அனைவரும் மக்களது நலனுக்காக பங்காற்ற வேண்டும். ஆனல் துரதிர்ஷ்டவசமாக அரசாங்கம் எல்லாவற்றையும் செய்ய முயற்சிக்கிறது"— என்கிருர். "அனுமிகா" என்ற பெயரில்லாப் பூச்சியாக இருக்கவேண்டிய அரசு அனுவசியமாகபலவிஷயங்களில் தலையிட்டுத் தொந்தரவு செய்கிறது என்று பொருள்.

## பாட்டாளிகள் புரிந்துகொள்ளவேண்டும்

அப்படி என்ன இந்த அரசாங்கம் செய்துவிட்டது? ஒரு மண்ணுங்கட்டியும் செய்யவில்லை. "அனுமிகா"வும் "மகாஜன"மும் சேர்ந்து திட்டமிட்டு. 'நான் அடிக்கிற மாதிரி அடிக்கிறேன். நீ அழுகிறமாதிரி அழு" என்ற ஏற்பாட்டின்படி நடக்கும் நாடகம் இது. 'அனுமிகா'வின் பிரதிநிதி சுப்ரமண்யம். "மகாஜனம்" நவல்டாட்டா; இவர்கள் நாடகம் ஆட, அரங்கு அமைத்துக் கொடுத்தார் வினேபாபாவே... அவ்வளவுதான்.

இருந்தாலும் சுரண்டல் வர்க்கமும் அதன ஆதரவாளர்களும் எத்தனை சாமர்த்தியமாகப் பேசி, தங்களது வியாபாரத்தை நடத்துகிருர்கள் என்பதை பாட்டாளி மக்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

---

## பந்த் — அர்த்தால்.........

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

வரவில்லை, இப்படியாக எல்லாத் தரப்பிலும் பந்திற்கு முழு ஆதரவு தந்ததின் பொருட்டு பந்த் முழு வெற்றி அடைந்தது.

மூன்று கட்சியிலும் சேர்ந்து 100க்கு மேற்பட்டவர்களை முன்கூட்டியே கைது செய்துள்ளனர். குறிப்பாக பாலக்குறிச்சியைச் சேர்ந்த மார்க்சிஸ்ட் கம்யூ. கட்சி தோழாகள் 19 பேரைகைதும் செய்தார்கள். அப்படி இருந்து பந்த் முழு வெற்றி அடைந்தது.

### அரூர் வட்டாரம்

பந்த் நடப்பதற்கு முன்பு போலீசார் 11-ந் தேதி இரவு சுமார் 12 மணி அளவில் அரிஜனகாலனிக்கு சென்று மாவட்ட கமிட்டி உறுப்பினர் ஆர் குப்புசாமியை அழைத்து வந்து சிறையில் அடைத்து விட்டார்கள். அதற்குப் பிறகு மார்க்சிஸ்ட் கட்சியின் தோழர்கள் எம் வேடியப்பன், எம் அண்ணுமலை பஞ்சப்பன் டாக்டா கே துரைசாமி இவர்களை 12—9—73-ந் தேதி காலை 10 மணிக்கு கைது செய்து ரிமாண்டில் வைக்கப்பட்டனர். இத்துடன் அதிமுக கம்யூனிஸ்ட் தோழர்களையும் இரவோடு இரவாகக் கைது செய்தனர்.

### தாராபுரம் கூட்டுறவு மில்லில் ஸ்டிரைக்

விலைவாசி உயர்வை எதிர்த்து மத்திய மாநில அரசுகளின் கையாலாகாத் தனத்தைக் கண்டித்து தமிழகம் முழுவதும் ஹர்த்தால் பொதுவேலை நிறுத்தம் நடந்ததை ஒட்டி தாராபுரத்திலும் வெற்றிகரமாக நடந்தது. அன்று முழுவதும் நகரின் முக்கிய வீதிகள் வெறிச் சோடிக்கிடந்தன,

கடைகள் ஓட்டல்கள் திறக்கப்படவில்லை அரசு—தனியார் பஸ்கள், லாரிகள் வாடகைக்கார்கள் ஓடவில்லை. சினிமா தியேட்டர்கள் மூடப்பட்டிருந்தன. தாராபுரம் கூட்டுறவு மில்லில் சி ஐ டி யூ— அ தி மு க தொழிற்சங்கத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள் மொத்தம் எண்பது சதம் பேர் வேலை நிறுத்தம் செய்து அர்த்தாலில் பங்கெடுத்தனர். போலீஸ் தலையீட்டிற்கே இடமின்றி பந்த் வெற்றிகரமாக நடந்தது. அர்த்தால், பொது வேலை நிறுத்தத்துக்கு பொதுமக்கள் பூரண ஆதரவு அளித்தனர்.

கூட்டம் நடத்த அனுமதி மறுப்பு 13—9—73-ல் தாராபுரம நகரசபை முன்பு பொதுக்கூட்டம் நடத்த 7 நாட்களுக்கு முன்பே போலீஸாரிடம அனுமதி கேட்டு விண்ணப்பம் கொடுத்திருந்தும் 13-ந் தேதி காலையில் பொதுக்கூட்டம் நடத்தக் கூடாது என்று கூறிவிட்டனர். ஆகவே அன்று நடக்க இருந்த—மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக்கூட்டம் ஒத்தி வைக்கப்பட்டது. ஜனநாயக உரிமைகளில் ஒன்ருன பேச்சுரிமையைக்கூட திமுக சர்க்காரின் போலிசார பறித்தனர்.

### நீலகிரி-கூடலூர்

கூடலூரில் பாங்குகள் உயர்நிலைப் பள்ளிகள், கடைகள் அனைத்தும் மூடியேகிடந்தன. போக்குவரத்து நடைபெறவே இல்லை. காலை 6 மணியிலிருந்து மாலை 7 மணி வரையிலும் ஒரு சைக்கிள் கூட ஓடவில்லை.

மாலை 4-மணி அளவில் 'பந்த்' விளக்கப் பொதுக் கூட்டம் நடைபெற்றது இக் கூட்டத்திற்கு தோழர் டி. வி, கமலாட்சன் தலைமை வகித்தார் தோழர்கள் பி, கிருஷ்ணன் குட்டி சலாம் ஆகியோர்பேசினர்

### அ. தி. மு. க. வலது கம்யூனிஸ்ட் மோதல்

"மூன்று நோயாளிகளை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்ல தனி அனுமதி தேவை என்று ஒரு வலது கம்யூனிஸ்ட் பிரமுகர் கேட்டுக்கொள்ள மார்க்சிஸ்ட்-அதிமுக தொண்டர்கள் ஒத்துக்கொண்டனர்.

ஆனல் நோயாளிகளை ஏற்றி சென்ற கார் ஆஸ்பத்திரிக்கு செல்லாமல் வேறு திசை நோக்கிச் செல்லவே அதிமுக தொண்டர்கள் வேகமாக பின் தொடர்ந்து காரை சுற்றி வளைத்தனர்.

மைசூரிலிருந்து கோழிக்கோடு செல்லவேண்டிய மூன்று பயணிகளிடம் அந்த வலது கம்யூனிஸ்ட் பிரமுகர் பேரம் பேசி பணம் பெற்றுக் கொண்டு அவர்களை நோயாளி வேடம் போட வைத்து அனுமதியும் வாங்கிய உண்மை அப்பொழுது தான் வெளியானது.

இதைத் தொடர்ந்து அதிமுக தொண்டர்கள் வலது கம்யூனிஸ்ட் பிரமுகரை ஓட ஓட விரட்டியடித்தனர். இதனுல் அதிமுக வலது கம்யூனிஸ்ட் கட்சிகளுக்கிடையே கசப்புணர்ச்சி ஏற்பட்டது.

### பந்தன்று கைது வழக்கு

கிருஷ்ண கிரி நவ 17- அமைதியான முறையில் நடந்த அர்த்தாலின் போது தி. மு. க. காலிகளின் தூண்டுதலின் பேரில் அ. தி. மு. க. வை சேர்ந்த அப்பாதுரை, ஆர். ரெங்கநாதன், ராகவன், சி. பி. எம் தோழர். சின்னச்சாமி ஆகியவர்கள் கைது செய்யப்பட்டனர் அவர்கள் மீது ஐ. பி. சி. 147, 341, பிரிவின் கீழ் வழக்குகள் பதிவு செய்யப்பட்டுள்ளது.

### இணைந்து செயல்பட்டனர் பந்த் வெற்றி

கோம்பை செப் -17 கோம்பையில், அண்ணு திராவிட முன்னேற்றக் கழகம், மார்க்சிஸ்ட் கட்சியும் கோம்பை நகரத்து மக்களுக்கு நோட்டீஸ், மூலம் பந்த் நடத்த கேட்டு கொண்ட கோம்பை நகரமே கண்டிராத வண்ணம் முழுக்கடையடைப்பு நடைபெற்றது. அதிகாலை 6 மணிக்கே தெருவெல்லாம் வெறிச் சோடிக் கிடந்தது 12-ந்தேதி நம் தோழர்களையும், அதிமுக தோழர்களையும் கைது செய்தது அரசு அப்படி இருந்தும் பந்த் நூற்றுக்கு நூறு வெற்றி பெற்றது.

### தர்மபுரியில் அர்த்தால் முழுவெற்றி

தர்மபுரி செப். 17— தர்மபுரியில் 13—9—73-ந் தேதி அர்ததால் முழு வெற்றி அடைந்தது. கடைகள் திறக்கப்படவில்லை. போககுவரத்து நடைபெறவில்லை. பள்ளிகள், கல்லூரி மூடப்பட்டிருந்தன, அர்த்தால அமைதியாக நடைபெற்றது. அர்த்தாலை முறியடிக்க போலீசார் தடையுத்திரவு பிறப்பித்திருந்தும் 12—9—73-ந் தேதி மாலை தர்மபுரி நகரின் முக்கிய வீதிகளில் போலீசார் படை பரிவாரங்களுடன் துப்பாக்கி, குண்டாந்தடிகளுடன் வேன்களிலும் ஜீப்களிலும் ஊர்வலம் நடத்தியும் கூட மக்கள் அஞ்சாமல் அர்த்தாலை வெற்றி பெறச் செய்தனர். தடுப்பு நடவடிக்கையாக மார்க்சிஸ்ட் கட்சி தோழர்கள் உள்ளிட்ட பலர் கைது செய்யப்பட்டனர். கைது செய்யப்பட்டவர்கள் 14-9-73-ந் தேதி மாலை விடுவிடுவிக்கப்பட்டதும் அவர்களுக்கு பெரும் வரவேற்பு அளிக்கப்பட்டது.

---

## தீக்கதிர் வளர்ச்சி நிதி

குடியாத்தம் செதுக்கரை தோழர் ஏ. நடராஜனுக்கும் செல்வி முனியம்மாளுக்கும் சென்ற 14-ம தேதி நடைபெற்ற திருமணத்தின் போது குடியாத்தம் 13-வது வட்ட கட்சி செயலாளர் தோழர் ஆர். சண்முகத்திடம் தீக்கதிர் வளர்ச்சி நிதியாக ரூ. 5 அளிக்கப் பட்டது.

★ ★ ★

தாராபுரம் தோழர் சி. தண்டபாணிக்கும், முத்தம்மாளுக்கும் நடந்த திருமணத்தின் போது தீககதிர் வளர்ச்சி நிதிக்காக 15-00 ரூபாய் வழங்கப் பட்டது.

## வேலைநிறுத்தம் தற்காலிக ஒத்திவைப்பு

தர்மபுரி, செப் 17— தர்மபுரி நகரசுத்தி தொழிலாளர்கள் மாநிலம் தழுவிய 19 அம்சக் கோரிக்கைகளுக்காக 17-9-73-ந் தேதி வேலைநிறுத்தம் செய்வதாக அறிவித்திருந்தனர். அரசின் தரப்பில் பேச்சுவார்த்தைக்கு அழைத்திருப்பதனுல் வேலை நிறுத்தம தற்காலிகமாக ஒத்திவைக்கப் பட்டுள்ளது.

# கண்ணோட்டம்

## குலசேகரத்தையும் பூந்தாழங்குடி ஆக்க கருணாநிதி அரசுக்கு காமராசர் தூபம்

சிண்டிகேட் காங்கிரஸ் பெருந்தலைவர் காமராசர், கடந்த 16—9—73-ல் குமரி மாவட்டம் குலசேகரத்திற்குப் போய், மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு கட்சியைத் தாக்கிப் பேசியிருக்கிறார்.

(தினமலர் 17—9—73)

"இடது கம்யூனிஸ்டுகள், காங்கிரஸ் தொண்டர்களையும் எக்கட்சியிலும் சேராதவர்களையும் வீடு புகுந்து அடிப்பதாகவும்— அவர்கள் மீது போலீசில் புகார் கொடுத்தால், போலீஸார் கேஸ்கூம் போடுவதில்லையென்றும்— கேஸ் போட்டால் போலீசாரையும் தாக்குவதாகவும்— அதனால் போலீசார் நடவடிக்கை எடுக்க பயப்படுவதாகவும்— இடது கம்யூனிஸ்டுகள்மீது அரசாங்கம் நடவடிக்கை எடுக்கவேண்டுமென்றும்— காங்கிரஸ் ஆட்சிக்கு வந்தால் இடது கம்யூனிஸ்டுகளை ஜெயிலுக்கு அனுப்புமென்றும்— அவர்களே நாட்டைவிட்டு ஓட வேண்டுமென்றும்— ஆவேசமுடன் பேசியிருக்கிறார்.

அன்று அவர் பேசிய பேச்சின் பெரும் பகுதியும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைத் தாக்குவதிலேயே குறியாக இருந்தது.

சுருக்கமாகச் சொன்னால், குமரி மாவட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுகள் மீது, அடக்குமுறையை ஏவி விட வேண்டுமென்று, தி மு க அரசை காமராசர் உசுப்பி விடுகிறார்.

காமராசருக்கு குமரி மாவட்ட மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டுகள் மீது இப்பொழுது ஆத்திரம் அதிகரித்து உள்ளது. அவருக்கு ஆத்திரம் ஏன் வருகிறது?

குமரி மாவட்டத்தில் குலசேகரம் பகுதி மலைப்பிரதேசங்களில் உள்ள ரப்பர் தோட்டங்களில் சி ஐ டி யூ சங்கம்தான் தொழிலாளர்கள் மத்தியில் பலம் வாய்ந்த சங்கமாகும்.

தோட்டத் தொழிலாளர்களில் முக்கால்வாசிக்கு மேல் சி ஐ டி யூ சங்கத்தில் அங்கம் வகிக்கிறார்கள். தங்களுடைய உரிமைப் போராட்டங்களிலும், ஜனநாயக இயக்கங்களிலும் உற்சாகமாகவும், ஒற்றுமையாகவும் ஈடுபடுகிறார்கள். போராடி பல வெற்றிகளையும் அடைந்திருக்கிறார்கள்.

இதனால் ஆத்திரமுற்ற முதலாளிகள், இந்த ஒற்றுமையை உடைக்க எவ்வளவோ காசு பணம் செலவழித்தும் கருங்காலிகளையும் குண்டர்களையும் ஏவி தாக்குதல தொடுத்தும், ஒற்றுமையை உடைக்க முடியாமல் தோல்வி கண்டனர். முதலாளிகளுக்கு ஆதரவாக போலீசாரும் சி ஐ டி யூ தொழிலாளர்கள் மீதும் ஊழியர்கள் மீதும் எத்தனையோ பொய்க் கேசுகளைப் போட்டு அலைக்கழித்தார்கள்.

என்ன செய்தும் தொழிலாளர்களின் ஒற்றுமையையும் போராட்ட உணர்வையும் உடைக்க முடியாமற்போன முதலாளிகள், ஐ என் டி யூ சி சங்கத்துக்கு முழுமூச்சாக ஆதரவு கொடுத்து, உடைப்பு வேலைகளுக்கு ஊக்கமூட்டினார்கள்.

ஒவ்வொரு வேலை நிறுத்தப் போராட்டத்தின் போதும் கருங்காலி வேலை செய்தவர்களே ஐ என் டி யூ சியில் அடைந்து கிடக்கிறார்கள்.

அவர்கள் மூலமாக, தொழிலாளர் ஒற்றுமையை உடைக்க, மலையாளி என்றும், நாடாரென்றும் ஜாதி இனப் பூசல்களைக் கிளறிவிட்டார்கள். ஜாதி அனலிலேயே கூதல் காய்ந்து வரும் ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் சிலர் ஜாதி வெறியை மூட்டியும் பார்த்தார்கள்.

ஆனால் சாதிச் சண்டைக்கு இரையாவதற்கு இது முதுகுளத்தூர் அல்ல— என்பதை, நாடார் தொழிலாளர்களும் மலையாளித் தொழிலாளர்களும் மற்றுமுள்ள பல்வேறு வகுப்பைச் சார்ந்த பாட்டாளிகளும் ஒற்றுமையாக இருந்து வர்க்க சகோதர பாசத்தை நிரூபித்தார்கள்.

ஜாதிப் பெயரை உச்சரித்தும்கூட, ஐ என் டி யூ சி சங்கத்துக்கு ஆள் திரட்ட முடியவில்லையே என்ற ஆத்திரத்தால், குலசேகரம் வட்டார சிண்டிகேட் ஆட்கள், காமராசரிடம் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுகளைப்பற்றி பூதக் கதைகளை கூறியிருக்கிறார்கள்.

இயல்பாகவே முதலாளிகளுக்கும் நிலப் பிரபுக்களுக்கும் ஆதரவாளரான காமராசர், மொட்டைத்தாதன் குட்டையில் விழுந்தது போல— காரண காரியம் எதுவுமே சொல்லாமல், மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டுகள் மீது பழிசுமத்தி, போலீசை ஏவிவிடுமாறு கருணாநிதி சர்க்காரை முடுக்கி விடுகிறார்.

இதே போலதான் கூலி உயர்வுக்காக தஞ்சை விவசாயத தொழிலாளர்கள் போராடிக் கொண்டிருந்த போது, "போலீஸ் ஏன் குத்துக்கல்லு மாதிரி நிற்கிறது. இவர்களுக்கு எதற்கு சம்பளம் கொடுக்க வேண்டும்?" —என்றெல்லாம் தஞ்சை மாவட்ட சுற்றுப்பயணத்தின் போது, குன்னியூர் சாம்பசிவஅய்யர் வீட்டில் விருந்து சாப்பிட்டு விட்டு, பொதுக்கூட்டத்தில் பேசினார் காமராஜர்,

அவரது பேச்சுக்கு பிற்பாடுதான் பூந்தாழங்குடியில் துப்பாக்கி சூடு நடத்தி, கூலி விவசாயி பக்கிரிசாமியின் உயிரைக் குடித்தது தி மு க அரசு,

தஞ்சை மாவட்டத்திற்கு போய், விவசாயத் தொழிலாளர்களை நசுக்க போலீசை ஏவுமாறு தி மு க அரசுக்கு மூட்டம் போட்ட அதே காமராசர்தான், இப்பொழுது குமரி மாவட்டத்துக்குப் போய், தோட்டத் தொழிலாளர்கள் மீதும், போலீசை ஏவி உயிரைக் குடிக்குமாறு தி மு க அரசுக்கு மூட்டம் போடுகிறார்.

தஞ்சைமாவட்டத்துக்குச் சென்றபோது. விவசாய தொழிலாளர்களின் கோரிக்கைகளை ஆதரித்தும், நிலப் பிரபுக்களைக் கண்டித்தும் ஒரு வார்த்தையும் பேசாதது போலவே—குமரி மாவட்டத்துக்குப் போகும் போதும், தோட்டத் தொழிலாளர்களை ஆதரிக்கவில்லை; தோட்ட முதலாளிகளின் சுரண்டல் கொடுமைகளையும் எதிர்க்கவில்லை.

சுதந்திரத்துக்கு முன்னும் சரி. பிறகும் சரி, காமராசர் ஒரு வலதுசாரியாகவே இருந்து வருகிறார்,

வேங்கைப் புலியின் தோலிலுள்ள வரிகள் மாறினாலும் மாறலாம். ஆனால், காமராசரின் பிற்போக்குக் கருத்துக்கள் மாறவே மாறாது போலிருக்கே!

ஐ. மா. பா.

---

விலைவாசி உயர்வுக்கு

# அரசின் பற்றுக்குறை பட்ஜெட்டே காரணம்

## ரிசர்வ்பேங்கின் குற்றச்சாட்டு

பம்பாய், செப். 16— அரசாங்கத்தின் பற்றுக்குறை பட்ஜெட்டின் மூலம் பொதுவான விலை மட்டத்தின்மீது ஏற்பட்ட கடுமையானர், தொடர்ச்சியான அழுத்தமே மென் மேலும் விலைகள் உயர்வதற்கு காரணம் என ரிசர்வ்பேங்க் இந்திய அரசாங்கத்தை குற்றம் சாட்டியுள்ளது.

### கணிக்க முடியாத பற்றுக்குறை

மேலும், மத்திய அரசால் 1972-73-ம்ஆண்டு பட்ஜெட்டில் எவ்வளவு பற்றுக்குறை ஏற்படும் என்பதை கணிக்க முடியவில்லை. 1972-73-ம்ஆண்டில் மத்திய அரசின் பட்ஜெட்டில் 252 கோடி ரூபாய்க்கு பற்றுக்குறை ஏற்படும்எனக் கணக்கிடப்பட்டது திருத்தப்பட்ட பட்ஜெட்டில் ரூ 550 கோடிக்கு பற்றுக்குறை ஏற்படும் என மத்திய அரசு கருதியது. ஆனால் 72-73-ம் ஆண்டு பட்ஜெட்டின் பற்றுக் குறையோ 882 கோடி ரூபாய்க்கு சென்றுவிட்டது.

### செலவுக்கேற்ற பலனில்லை

மாநில அரசுகள், ரிசர்வ் பேங்கிற்கு கொடுக்க வேண்டிய காலங்கடந்த கடன் தவணையை திருப்பிக் கொடுப்பதற்காக, மத்திய அரசு, மாநில அரசுகளுக்கு கொடுத்த 421 கோடி ரூபாய் சேர்க்கப்படாமலே பற்றுக்குறை பட்ஜெட் 882 கோடி ரூபாயாகும் என்பது குறிப்பிடத்தகுந்தது என ரிசர்வ்பேங்க் ரிபோர்ட் கூறுகிறது.

மேலும் அந்த ரிபோர்டில், 1971-72-ம் ஆண்டில் செலவிட்ட உள்நாட்டுச் செலவிற்கேற்ப பலன் ஏற்படவில்லை. இதுவும் விலைவாசி உயர்வுக்கு ஒரு காரணமாகும் என்று கூறப்பட்டுள்ளது.

### அதிக நோட்டு அடிப்பு

'பங்களதேஷ் யுத்தத்தில் இந்தியா ஈடுபட்டதன் காரணமாக ஏற்பட்ட சூழ்நிலையே பொருளாதார நெருக்கடிக்குக் காரணம்' என இந்திய அரசாங்கம் கூறுவதை சரியான காரணமல்ல என ரிசர்வ் பேங்க் ரிபோர்ட்கூறுகிறது,

நோட்டடிப்பை அதிகரித்து அதன் மூலம் நாட்டின் செலவினங்களை சரிக்கட்டியதுதான் இன்றைய விலைவாசி உயர்வுக்கு காரணமாகும் என்றும் அதில் குறிப்பிடப் பட்டுள்ளது.

---

சங்கரன்கோவிலில்

# தி மு க வெறியாட்டம்

## தோழர் முப்பிடாதிதாக்கப்பட்டார்

சங்கரன்கோவில், செப், 17- செப். 13 'பந்த்' சங்கரன் கோவில் பகுதியில் வெற்றிகரமாக நடந்ததையொட்டி ஆத்திரம் அடைந்த தி மு க வினர், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சங்கரன் கோவில் கிளைச்செயலாளர் தோழர் ஆர். எஸ். முப்பிடாதியை கடுமையாகத் தாக்கி படுகாயப் படுத்தியுள்ளனர்.

சங்கரன் கோவிலில்'பந்த் தினத்தன்று ஒரே ஒரு கடை மட்டும் திறக்கப்பட்டிருந்தது தோழர் முப்பிடாதி தலைமையில் மாணவர்களும், தொழிலாளர்களும் கடைக்காரரிடம் கடையை மூடும்படி அமைதியாகக் கேட்டுக் கொண்டனர், கடைக்காரரும் அதற்கு இசைந்து கடையை மூடுகையில் ஆத்திரம் அடைந்த தி மு க வினர் வை காமாட்சி,பெருமாள்சாமி நாயுடு கிருஷ்ணன்நாயுடு ஆகியோர்தலைமையில் மாணவர்களையும் தொழிலாளர்களையும், கூடி நின்ற மக்களையும் வேல்கம்பு அரிவாள் ஆகிய ஆயுதங்களைக் கொண்டு பயங்கரமாகத் தாக்கினர்.

### தி மு க ரவுடிகள் தாக்கினர்

உடனே தோழர் முப்பிடாதி தலையிட்டு சமாதானம் செய்ய முயன்றார், ஆனால் தி மு க ரவுடிகள் அனைவரும் முப்பிடாதி மீது பாய்ந்துஅவரைகீழேதள்ளி அடித்து உதைத்தனர்,

தோழர் முப்பிடாதிக்கு முகத்தில் இடது கண் பக்கமும், தலையிலும், பிடரியிலும் பலமான காயங்கள் ஏற்பட்டுள்ளன.

தோழர் முப்பிடாதி பாளையங்கோட்டை அரசு மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டிருக்கிறார்.

---

# மக்கள்விரோத அரசை அகற்றுவோம்

## தோழர் ஏ. கே. ஜி. அறைகூவல்

திருவனந்தபுரம், செப். 16— மக்கள் பிரச்னைகளுக்கு முடிவு காண முயற்சிக்காத ஆட்சி கூடங்களுக்கெதிராக மக்கள் ஒன்றுதிரண்டு போராடித்தான் ஆகவேண்டும் என்று நேற்று திருவனந்தபுரத்தில் பத்திரிகையாளர்களிடையே பேசும் போது தோழர் ஏ கே கோபாலன் எம் பி அறைகூவல் விடுத்தார்.

அவர் பேச்சு விவரம் வருமாறு:—

மக்கள் பஞ்சாயத் செஸ் போன்ற வரிகள் கொடுக்கக்கூடாது. தரிசு நிலங்களில் பயிரிட வேண்டும், தொழில் உரிமைகளை கைப்பற்ற வேண்டும். மக்கள் விரோத ஆட்சியாளர்களை ஆள விடக்கூடாது.

செப்டம்பர் 25ந் தேதி எதிர்கட்சி எம் எல் ஏக்கள் உண்ணாவிரதம் துவங்குகின்றனர். அது சட்டசபை கூட்டப்பட வேண்டும் என்பதற்காக மட்டுமல்ல, பிற்போக்கு கொள்கைகளை எதிர்ப்பதற்காகவும் தான் இந்த உண்ணாவிரதத்திட்டம் தயாரிக்கப்பட்டுள்ளது.

### ஊர் சுற்றிகளை விரட்டுங்கள்

மானமிருந்தால் இந்த அமைச்சரவை ராஜினாமா செய்ய வேண்டும். மக்களுக்கு உணவு கொடுக்க வக்கற்ற ஒரு அரசு ஆட்சி பீடத்தில் இருப்பதால் என்ன பயன். ஆனால் இந்த ஆட்சியாளர்கள் மக்கள் அனைவரும் பட்டினியால் செத்தாலும் ஆட்சியை விட்டு வெளியேற மாட்டார்கள். இவர்களை மக்கள் ஒன்று திரண்டுதான் வெளியேற்ற வேண்டும்.

எம் எல் ஏக்கள் உண்ணாவிரதம் துவங்கும் போது மக்கள் செய்ய வேண்டுவதென்னவென்றால் இந்த அமைச்சர்களை ஊர் சுற்ற விடக் கூடாது.

### வலதுகள் வஞ்சகம்

காங்கிரசை இடதுசாரி சக்தியாக மாற்ற முனைந்து வேலை செய்யும் வலது கம்யூனிஸ்ட் ஆட்சி, தொழிலாளர்களின் போனசில் கை வைக்கிறது.

ஏழை அரிஜன பெண்கள் தினந்தோறும் கற்பழிக்கப் படுகின்றனர். இவற்றிற்கெல்லாம் பதில் மக்கள் தான் கொடுக்க வேண்டும். இவ்வாறு தோழர் ஏ கே ஜி ஆவேசமாக பேசினார்.

---

# அலெண்டே அரசை..

(1:ம் பக்கத் தொடர்ச்சி)

ஸஉச்குர் எந்தவொரு தொடர்பும் இல்லவேயில்லை யென்று, அமெரிக்க ராஜாங்க இலாகா சாதித்தாலும் கூட, வாஷிங்டனிலுள்ள அரசியல் நோக்கர்கள் அதை நம்பத் தயாராக இல்லை.

### வியட்நாம் நாடகமே இங்கும் நடக்கிறது

இராணுவத் தாக்குதலுக்கும் சிலியிலுள்ளஅமெரிக்க தூதர் டேவிஸுக்கும் சம்பந்தமே இல்லையென்று கூறுவது எப்படி இருக்கிறது?

தென்வியட்நாம் அதிபர் ரிகோதின் தியம் கொல்லப் படுவதற்கு இரண்டொரு நாட்களுக்கு முன்னதாகவே, செய்கோனிலிருந்து அங்குள்ள அமெரிக்க தூதர் ஹென்றிகேபட் லாட்ஜ் திடீர் என்று வாஷிங்டனுக்கு வந்து விட்டுப் போனதையும், அதையடுத்து தின்தியம் கொல்லப்பட்டதும் அறிவீர்கள்,

தின்தியம் கொல்லப்பட்டதற்கும் கேபட்லாஜுக்கும் சம்பந்த முள்ளதா என்று கேட்டபோது. "ஒன்றுமே சம்பந்தமில்லை "என்று அமெரிக்க ராஜாங்க இலாகா அறிக்கை விட்டதே, அதே போன்றுதான் இப்பொழுது சிலியிலுள்ள அமெரிக்க தூதர் டேவிஸுக்கும் ஜனாதிபதி அலெண்டே படுகொலைக்கும் சம்பந்தமில்லை என்று ராஜாங்க இலாகா அறிக்கை விடுத்துள்ளது

அன்று நடந்த வியட்னாம் நாடகம்தான், இன்று சிலியில் நடக்கிறது.

இம்மாதம் 8ம் தேதி கூட— அதாவது, இராணுவத் தாக்குதல் நடைபெறுவதற்கு 2 நாட்களுக்கு முன்னதாகவே--வாஷிங்டனிலுள்ள அமெரிக்க இரகசிய இலாகாவைச்சேர்ந்த சில அதிகாரிகள், "சிலியில் இராணுவத் தாக்குதல் ஏற்படப்போவதாகவும், எந்தச் சமயத்தில் துவக்கப் போகிறது, என்பதை அறியவே தாங்கள் காத்திருப்பதாகவும்"-சொன்னார்கள்.

### இரண்டு ஆண்டுகளுக்கு முன்னேயே மகஜர்

அலெண்டே சர்க்காரை கவிழ்ப்பதில் தங்களுக்கு எந்தவிதமான அக்கறையும் இல்லையென்று அமெரிக்க அதிகாரிகள் ஓயாமல் சொல்லி வந்த போதிலுங்கூட, ஒரு விஷயத்தை நாம் மறந்துவிட முடியாது.

சிலி நாட்டில் இருந்த ஐ டி டி கம்பெனியை— அதாவது, இண்டர் நேஷனல் டெலிபோன் அண்டு டெலகிராப் கம்பெனியை அலெண்டே சர்க்கார் தேசவுடமைஆக்கிட்சட்டம்செய்தவுடனே, அமெரிக்க முதலாளிகளுக்கு ஆத்திரம் வந்தது. இந்தக் கம்பெனி ஒரு அமெரிக்கக் கம்பெனி. உலகத்திலேயே 9-வது பெரிய கம்பெனி. நூற்றுக் கணக்கான தொழில்களை நடத்தி கொழுத்த லாபம் சம்பாதித்து வந்த கம்பெனி.

இந்தக் கம்பெனியை அலெண்டே அரசு தேசவுடைமை ஆக்கியதும், இக் கம்பெனியின் உபதலைவர் வில்லியம் மெரியம் இரண்டு ஆண்டுகளுக்கு முன் வெள்ளை மாளிகைக்கு வந்து நிக்ஸனிடம் ஒரு மகஜரை சமர்ப்பித்தார்.

அந்த மகஜரில் சிலி நாட்டின்மீது பொருளாதார யுத்தம நடத்தவேண்டுமென்றும்— சிலி நாட்டிலே பரந்த அளவில் அராஜகமும் குழப்பங்களும் ஏற்படும்படியாக நாச வேலைகள் செய்ய வேண்டுமென்றும் — அந்த குழப்பங்களை ஒடுக்கி, அனமதியையும், ஒழுங்கையும் நிலைநாட்டுகிறோமென்ற பேரால் அலெண்டே அரசு மீது சிலி இராணுவம் படையெடுக்க வேண்டுமென்றும்— அதற்கான சதித் திட்டங்களைத் தீட்டி சிலி இராணுவத்துக்குள் ஆள் பிடிக்க வேண்டுமென்றும்— அலெண்டே அரசைத் தூக்கி எறிவதில் வெற்றி பெறுவோம் என்ற நம்பிக்கையை இராணுவத் தலைவர்களுக்கு ஊட்டவேண்டுமென்றும் அந்த மகஜரில் கூறப்பட்டிருந்தது.

### குடித்துவிட்டு கும்மாளம்

கடந்த 12—9—73-ல் வாஷிங்டனுக்கு வந்துள்ள சிலி இராணுவ அதிகாரிகள், அலெண்டே அரசு கவிழ்க்கப்பட்டதற்காக ஆரவாரம் செய்து குடித்துக் கும்மாளம் போட்டதாக. டைம்ஸ் ஆப் இந்தியா பத்திரிகை நிருபர் எழுதுகிறார்,

---

# தேச விடுதலை...

1-ம் பக்கத் தொடர்ச்சி

கிடைத்த சாவு, போர்க்களத்தில் புறமுதுகு காட்டாத ஒரு மாவீரனுக்கு கிடைத்த சாவேயாகும் அரசு மாளிகை மீது பாசிஸ்ட் இராணுவங்கள் குண்டு வீச்சு நடத்திய போதுகூட, பெண்களையும் நண்பர்களையும் பாதுகாக்க கடைசிவரையில் பாடுபட்டார்.

### கல்கத்தாவில்

கல்கத்தா விமான நிலையத்தின் தாழ்வாரத்தில் நின்றுகொண்டு, பெருந்திரளான கூட்டத்தினர்மத்தியில் காஸ்ட்ரோ பேசினர்,

சிலி மக்களின் போராட்டம் தொடர்ந்து நடக்குமென்றும், ஏகாதிபத்யம் அடியோடு ஒழிக்கப்பப்படும் வரை, ஏந்திய ஆயுதங்களைக் கீழே போடமாட்டார்கள் என்றும் கூறினர்.

இந்தியாவைப்பற்றி அவர் குறிப்பிடுகையில்:

"இந்தியாவின் வறுமையும் துயரங்களும் எவ்வளவு அதிகமாக இருக்கிறது என்பதை நான் அறிந்துகொண்டேன் - இவையெல்லாம் இந்திய நாட்டுக்கு ஏகாதிபத்யம் விட்டுச்சென்ற சின்னங்கள்-

ஐரோப்பாவைக் காட்டிலும் ஆயிரம் ஆண்டு கலாச்சார வளர்ச்சியுடைய இந்திய நாடு இன்று வறுமையால் தத்தளிக்கிறது. அதே சமயத்தில் இன்றைய ஐரோப்பாக் கண்டத்தில் செல்வம் கொழித்துக்கிடக்கிறது. இதற்கு காரணம் என்ன? சுரண்டப்பட்ட காலனி நாட்டு மக்களின் இரத்தத்திலிருந்தும் உழைப்பிலிருந்தும் ஏகாதிபத்ய வாதிகள் செல்வத்தைக் கறந்தார்கள். இதுதான் காலனி நாடுகளின் வறுமைக்குக் காரணம்"— என்று கூறினர்.

முடிவாக, "உலகத் தொழிலாளர்களே ஒன்று சேருங்கள்! இந்தியா நீடூழி வாழ்க!" என்று முழக்கமிட்டு நன்றி கூறினர்.

---

# தர்ணா தோழர்களுக்கு ரிமாண்ட் நீடிப்பு

மதுரை, செப். 18— விலைவாசி உயர்வை எதிர்த்து. சென்ற 1-ந்தேதியன்று அரசு அலுவலகங்கள் முன்பு"தர்ணா"நடத்திய பெரியகுளம், போடி, கம்பம் பகுதிகளைச் சேர்ந்த சுமார் 200 தோழர்களுக்கு மேலும் 15 நாட்கள் வரை இன்று ரிமாண்ட் நீடிக்கப்பட்டுள்ளது. இந்தத் தோழர்கள் மதுரை மத்திய சிறையில் உள்ளனர்.

---

# கூட்டுறவு அதிகாரியின் சர்வாதிகாரப் போக்கு

கோவை, செப் 17— கோவை துடியலூரில் இருக்கும் துடியலூர் கூட்டுறவு விவசாய சேவா ஸ்தாபனம் என்ற பெயரில் ஒரு பெரியகூட்டுறவுஸ்தாபனம் நடைபெற்று வருகிறது. இந்த ஸ்தாபனத்தில் குமாஸ்தாக்களாகவும், தொழிலாளர்களாகவும் 120 பேர்களுக்கு மேல் வேலை செய்து வருகிறார்கள்.

ஏற்கனவே, 19-3-1972 ல் குமாஸ்தாக்கள் சம்பள உயர்வு விஷயமாக நிர்வாகத்தினருக்கும், மேற்படி ஸ்தாபன ஊழியர்களுக்கும் ஒரு உடன்பாடு ஏற்பட்டது அந்த உடன்பாடின்படி அரசு ஊழியர்களுக்கு கொடுக்கப்படும் ஊதிய விகிதத்தை (பஞ்சப்படி உட்பட) மேற்படி கூட்டுறவுஸ்தாபன பணியாளர்களுக்கும் வழங்குவதாக ஒப்புக் கொள்ளப்பட்டிருந்தது.

மேற்படி உடன்பாடுபடி, சென்ற ஆண்டு அரசு ஊழியர்களுக்கு பஞ்சப்படி உயர்த்தியபோது மேற்படி கூட்டுறவு ஸ்தாபன ஊழியர்களும் பஞ்சப்படி கோரினர். இதை நிர்வாகம் மறுத்தது.

### நிர்வாகத்தின் பழிவாங்கும் நடவடிக்கை

எனவே ஸ்தாபன ஊழியர் சங்கம், பஞ்சப்படி உயர்வு உட்பட, சில சாதாரண கோரிக்கைகளை சமர்ப்பித்தது. இதைக் கண்டு ஆத்திரமுற்ற நிர்வாகம் அக்கௌண்ட் டெண்டாக இருந்த மேற்படிபணியாளர் சங்க காரியதரிசியை குமாஸ்தா வேலைக்கு மாற்றியது. இதை அவர் ஆட்சேபிக்கவே தற்காலிக வேலை நீக்கம் செய்தது.

எனவே,தொழிலாளர்கள் 5-11-72-ல் வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுத்து 15-12-72 முதல் வேலைநிறுத்தம் செய்தனர், வேலை நிறுத்த காலத்தில் சங்க ஊழியர்கள் மீது பொய் கேஸ்கள் கொடுத்தும், சங்கத் தலைவர் உட்பட 35 பேரை சஸ்பெண்ட் செய்து கொடுமைக்குள்ளாக்கினர்,

அதன்பிறகு, சம்பளம்; இதர பிரச்சனைகள் சம்பந்தமாகப் பேச்சுவார்த்தை நடத்தி முடிவு காண்பதாகவும், சஸ்பெண்ட் செய்யப்பட்ட காரியதரிசியை திரும்ப வேலைக்கு அனுமதிப்பதாகவும் உடன்பாடு செய்யப்பட்டு, வேலை நிறுத்தம் முடித்து, வேலை ஆரம்பிக்கப்பட்டது. வேலை ஆரம்பித்த பின் ஏற்கனவே உடன்பாடு செய்து முடித்த அதே குற்றச்சாட்டின மீது மீண்டும் காரியதரிசிக்கு ஒப்பந்தத்தைமீறிவிசாரணை நடத்தியது. அந்தவிசாரணை முடிந்ததும் 2 நாட்களில் மீண்டும் திரு. லேபர் ஆபீஸர் அவர்களிடம்போக பெர்மிஷன் கேட்டதை காரியதரிசிக்கு மறுக்கப்பட்டது. இது சரியல்ல ஏற்கனவே, கொடுக்கப் பட்டுள்ளது என்று (டெப்டி ரெஜிஸ்ட்ராரை) மேற்படி ஸ்தாபன காரியதரிசி அவர்களிடம் எடுத்துக்காட்டியதற்காக, தவறாகப் பேசி விட்டாய் என்று குற்றம் சாட்டி உடனே தற்காலிக வேலை நீக்கம் செய்யப்பட்டு மாதக்கணக்கில் வெளியே நிறுத்தப்பட்டிருக்கிறார்.

சீனியர் டிரைவர்களுக்கு வேண்டுமென்றே லே-ஆப விடப்பட்டு, லைசன்ஸ் இல்லாதவர்களைக்கூட டிராக்டர் ஓட்டும் வேலை கொடுத்து வருகிறார்கள். மெக்கானிக்குக்கு மாதக் கணக்கில் லே-ஆப் விடப்பட்டு, வேறு டிப்பார்ட்மெண்ட்டில் இருக்கக் கூடிய ஒருவர் மூலம் அந்த வேலையை வாங்குகிறார்கள். மேலதிகாரிகள் நேரடியாகக் கோரியபடி டிராக்டர் ஓட்டிகள் டிராக்டரை ஓட்டினால், ஏன் அதிக நேரம் ஓட்டினாய் என்று தற்காலிக வேலை நீக்கம் செய்து வெளியே நிறுத்துகிறார்கள்.

### ஆட்குறைப்பு நடவடிக்கை

இதனால் எழுத்து மூலமான உத்தரவு இல்லாமல் டிராக்டரை ஓட்ட மாட்டோம் என்று வேறு டிராக்டர் ஓட்டி சொன்னால், ஏன் சொல்லியும் ஓட்ட மறுக்கிறாய் என்றும் நோட்டீஸ் கொடுக்கிறாகள். சங்க லீடர்களை வேண்டுமென்றே டர்மினேஷன் செய்கிறார்கள். அது தப்பு என்று திரு. லேபர் ஆபீஸர் அவர்களிடம் நிரூபிக்கப்பட்டால், ஆட்குறைப்பு" என்கிறார்கள். ஆட்குறைப்புக்கு பின்பற்றப்பட்டுள்ள முறையும் தவறு என்று எடுத்துக் காட்டினால், அப்படித்தான் செய்வோம் என்கிறார்கள். சம்பளஉயர்வுபிரச்சினையை பேச மறுத்ததோடு தட்டிக் கழித்து வருகிறார்கள். திரு. லேபர் ஆபீசர் அவர்கள் சொல்லிய யோசனையைக்கூட தட்டிக்கழித்து நிராகரித்து வருகிறார்கள்.

### ரெஜிஸ்ட்டாரின் சர்வாதிகாரப் போக்கு

மேற்படி ஸ்தாபனத்தின் காரியதரிசியாக ஒருடெப்டி ரெஜிஸ்ட்ரார் இருக்கிறார். அவர் கூட்டுறவு பதிவாளரைப்போல் இல்லாமல், சர்வாதிகாரியைப் போல் நடந்து வருகிறார், உதாரணமாகஊழியர்களுக்கு மெமோ கொடுத்தால், கையெழுத்து போடவேண்டும். ஆனால் ஊழியர்கள் அதற்குப் பதில் கொடுத்தால், நகலைப்பெற்றுக் கொண்டதாக யாரும் கையெழுத்துப் போட்டுத் தரமாட்டார்களாம். இது போல் பல்வேறு விதமான முறையற்ற நடவடிக்கைகள் நடைபெற்று வருகின்றன.

மேற்கூறிய நிலைமைகளை விளக்கி, தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களுக்கும், தமிழ்நாடு கூட்டுறவு அமைச்சருக்கும் மகஜர் அனுப்பியும், அதன் மீதுஎவ்வித நடவடிக்கையும் எடுத்தாகத் தெரியவில்லை. கூட்டுறவு பைலாவுக்கு விரோதமாக வேண்டியவர்களையும், டைரக்டர்களின் நெருங்கிய உறவினர்களையும், வேலைக்கு எடுத்து சர்வீஸ் ஆன பணியாளர்களை வெளியே துரத்தத் திட்டம் தீட்டி வருவதாகத் தெரிகிறது.

மேற்கண்ட அடக்குமுறைகளையும் ஜனநாயக விரோதமான செயல்களையும் செய்துவருகிற மேற்படி ஸ்தாபனத்தின் நிர்வாகிகளாக இருப்பவர்களில் சிலர் சில அரசியல் கட்சிகளில் மதிப்புமிக்க தலைவர்களாயும் இருக்கிறார்கள். இந்த கூட்டுறவு ஸ்தாபனத்தில் வேலை நிறுத்த காலத்தில் வேலைக்கு வந்த பணியாளர்களுக்கு சம்பள உயர்வு கொடுக்கப்பட்டு இருக்கிறது அதேகாலத்தில வேலை நிறுத்தத்தில் பங்கெடுத்த பணியாளர்களுக்கு சம்பள உயர்வு மறுக்கபபட்டுள்ளது.

ஆகவே குமாஸ்தாக்களும், தொழிலாளர்களும் தங்களது உரிமைகளைப் பாதுகாக்க விவசாய பொது மக்களின் ஆதரவோடு போராட தயாராகி வருகிறார்கள்.

---

# சிமெண்ட் விலை உயர்வு

புதுடெல்லி, செப் 16— மத்திய அரசு, சிமெண்ட் விலையை, டன்னுக்கு 10 ரூபாய் வரை உயர்த்தி விட்டது.

ஏற்கனவே, அதிக விலையில் விற்கப்பட்டும் பதுக்கல் செய்யப்பட்டும் வந்த சிமெண்ட்டுக்கு, தற்போது இந்திரா அரசு அதிக விலையும் நிர்ணயித்துள்ளது.

எற்கனவே, சிமெண்ட் கிடைக்காமல் அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் மக்களுக்கு, புதிய விலை உயர்வானது, 'வெந்த புண்ணில் வேல் கொண்டு பாய்ச்சுவது போல' இருக்கிறது.

இந்திரா ஆட்சியில் மக்கள் உயர வில்லை; விலைவாசி தான் உயருகிறது!

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸட] தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில், (13, முதல சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.